13th November 1961]

DEPUTY SPEAKER : The question is—

"That leave be granted for the introduction of the **Madras** Buildings (Lease and Rent Control) Amendment Bill, 1961."

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI V. RAMAIAH : Sir, I introduce the Bill.

DEPUTY SPEAKER : The Bill is introduced.

## IV.—GOVERNMENT MOTION.

### NATIONAL INTEGRATION.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"That the Paper laid on the table of the House on the 11th November 1961 on 'National Integration' be **taken into** consideration."

உதவி சபாநாயகர் அவர்களே, நவம்பர் 11-ம் தேதியன்று இந்த தேசீய இணைப்பைப் பற்றிய ஒரு அறிக்கை இங்கு சமர்ப்பிக்கப்பட்டது. அதற்கு முன்பும் இது சம்பந்தப்பட்டவரை இன்னொரு அறிக்கை இந்த சபை முன்னாலே சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது ராஜ்ய முதன் மந்திரிகள் மகாநாடு நடைபெற்று, அதிலே தேசீய இணைப்பைப் பற்றிய பல்வேறு விஷயங்கள் விவாதிக்கப்பட்டு, அந்தக் கூட்டத்தின் அறிக்கை இந்த சபையின் முன்பு முதலிலே சமர்ப்பிக்கப்பட்டது. அதையொட்டி இன்னொரு விரிவான மகாநாடு டெல்லியிலே நடைபெற்றது. அந்த மகாநாட்டின் அறிக்கைதான் இப்பொழுது இங்கே வைக்கப்பட்டுள்ளது. ஆகவே, நாம் இதைப்பற்றி விவாதிக்கும்பொழுது, இந்த இரண்டு அறிக்கைகளையும் மனதிலே கொண்டு விவாதிக்கவேண்டியவர்களாக இருக்கிறோம். அது மட்டுமல்ல, இந்த மகாநாடுகள் கூடுவதற்கு அடிப்படையாக இருந்தது இன்னொரு கமிட்டி. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி இந்த தேசீய இணைப்பு விஷயங்களைப் பற்றி பரிசீலனை செய்வதற்கு ஸ்ரீமதி இந்திரா காந்தியின் தலைமையின் கீழ் ஒரு குழுவை அமைத்தது. அந்தக் குழு தொடர்ந்து பல விஷயங்களைப் பற்றிப் பரிசீலனை செய்து, சில சிபார்சுகள் செய்தது. முதன் மந்திரிகள் எல்லோரும்கூடி அவைகளைப் பற்றி ஆலோசிக்கவேண்டும்; அதற்குப் பிற்பாடு விரிவானதொரு மகாநாடு கூட்டவேண்டுமென்கிற ஆலோசனையை அந்தக் கமிட்டி கூறியது. அந்த அடிப்படையில்தான் முதன் மந்திரிகள் மகாநாடு நடைபெற்றது. இப்பொழுது இரண்டாவது விரிவான மகாநாடு டெல்லியிலே பல்வேறு தேசீயக் கட்சிகளையும், கல்வித்துறை நிபுணர்களையும், இன்னும் தேசீயத் தலைவர்கள் எல்லோரையும் கொண்டு நடைபெற்றது.

இந்த மாதிரி தேசீய இணைப்பைப் பற்றி கவனம் செலுத்தி, அதைப் பற்றி விவாதிக்க மகாநாடுகள் நடத்துவதற்கு என்ன காரணம் என்பதைப்பற்றி பல பேரிடையே பல்விதமான கருத்து

வேறுபாடுகள் இருக்கின்றன. கருத்து வேறுபாடுகள் மட்டு மல்லாமல், சில இடங்களிலே குழப்பமும் கூட ஏற்பட்டிருக்கிறது. ஏதோ நம்முடைய நாட்டிலே தேசிய ஒற்றுமை முழுவதும் சீர் குலைந்து விட்டது, அப்பேற்பட்ட சீர்குலைவைத் தவிர்ப்பதற்காக இந்த மகாநாடு ஏற்படுத்தப்பட்டது என்று ஒரு சிலர் கருதி னார்கள்.

அவ்வாறு அடிப்படையாக இந்தச் சீர்குலைவு ஏற்படக்கூடிய நிலையில் இந்த மாநாடு கூட்டப்பட்டதா அல்லது ஆங்காங்கு தோன்றக்கூடிய சிறு சிறு பிரிவினை சக்திகள், பிளவு சக்திகள், வேற்றுமை சக்திகள், பிற்போக்கு சக்திகள் இவைகளைத் தடுத்து நாட்டிலே இன்னும் முன்னேறிச் செல்வதற்கு ஏற்பட்டதா என்ப தைப்பற்றி நாம் முதலிலே கவனம் செலுத்தவேண்டியது மிகவும் அவசியம். அவ்வாறு கவனம் செலுத்த வேண்டுமென்றால், இதற்குப் பின்னணியாக இருக்கும் பல்வேறு விஷயங்களை நாம் கவனிக்கவேண்டும். அதிலும் முக்கியமாக நாடு சுதந்திரம் பெற்றதற்குப் பிற்பாடு நாம் எடுத்திருக்கக்கூடிய பல்வேறு தேசிய இணைப்பு நடவடிக்கைகளைக் கவனித்து அவைகள் எந்த முறையில் ஏற்பட்டன, அவைகளில் எத்தனை குற்றங்குறைகள் ஏற்பட்டிருக்கின்றன, அவைகளில் ஏதாவது சீர்திருத்தவேண்டி யவையாக இருக்கின்றனவா என்பதை ஆலோசித்துப் பார்த்து, அவைகளில் அடிப்படையாக எந்தவிதமான தவறும் இல்லை, குறையும் இல்லை, ஆனால் மேலோடியாகச் சிறு சிக்கல்கள், சங்கடங்கள் தோன்றியிருக்கின்றன என்றால் அவைகளை எப்படித் தவிர்ப்பது என்பதை யோசிக்கவேண்டும்.

நான் ஒன்றைத்தான் சொல்லிக்கொள்கின்றேன். என்னுடைய கருத்திலே, இம்மாதிரி அடிப்படையாக இருக்கும் முறையிலே ஏற் பட்டிருக்கக்கூடிய சிக்கல்கள் இல்லை. அதற்குப் பதிலாக இந்தப் பத்து பதினைந்து ஆண்டுகளாக, நாம் சுதந்திரம் பெற்றதற்குப் பிற்பாடு, பல சாதனைகள் தேசிய ஒற்றுமையை உறுதிப்படுத்து வதற்கு எடுத்துக் காட்டாக ஏற்பட்டிருக்கின்றன என்பதுதான் என்னுடைய தாழ்மையான கருத்து. அதைப்பற்றித்தான் முதலில் நான் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். ஏனென்றால். அவ்வாறு உறுதி இல்லையென்றால் ஏதோ மேலோடியாக வெடிப்பு கள் ஏற்பட்டிருப்பது அல்ல, கட்டிடத்தின் அஸ்திவாரமே ஆட்டம் கண்டிருக்கிறது என்றால் அதற்கு எடுக்கவேண்டிய நடவடிக்கை கள் வேறு. ஆனால், மேலாக சிறு பிளவு ஏற்பட்டிருக்கிறது என்றால் அதற்காக எடுக்கவேண்டிய நடவடிக்கைகள் வேறு. ஆகையால்தான், இன்றைக்கு ஓரளவு ஆராயவேண்டிய அவசியம் என்ற முறையிலே சில கருத்துக்களை இந்தச் சபைமுன் நான் சமர்ப்பிக்க விரும்புகிறேன்.

முதன் முதலிலே நமக்குச் சுதந்திரம் வந்த காலத்திலே நாட்டிலே ஒரு பிரிவினை ஏற்பட்டது நம் எல்லோருக்கும் தெரியும். அந்தப் பிரிவினையின் காரணமாக நாட்டிலே ஏற்பட்ட நிகழ்ச்சிகள், ஏற்பட்ட கலவரங்கள், குழப்பங்கள், அந்தச்

13th November 1961] [Sri C. Subramaniam]

சிக்கல்கள் எல்லாம் நமக்கு நன்கு தெரியும். இவைகளையெல்லாம் நாம் நல்ல முறையிலே சமாளித்து, அப்பொழுது ஏற்பட்ட கலகத்தை அடக்கியது மட்டுமல்ல, குழப்பமான நிலையையும் சீர் படுத்தி லட்சக் கணக்கான மக்களுக்கு, நாடு பெயர்ந்து இங்கு வந் திருந்தவர்களுக்கு—ஒரு புதிய வாழ்வைக் கொடுத்து, அப்பொழுது ஏற்பட்ட பல பிரச்சினைகள் தீர்க்கப்பட்டிருக்கின்றன. ஆனால், அந்தப் பிரச்னைகளில் சில தீர்க்கப்பட்டிருந்தாலுங்கூட, பிரிவினை யின் காரணமாக ஏற்பட்ட இன்னும் பல சிக்கல்கள் இருக்கின்றன, தொடர்ந்து நாம் முன்னேற்றப் பாதையிலே செல்லக்கூடியதைப் பாதிக்கக்கூடிய முறையிலே அந்தச் சக்திகள் இயங்கிவருகின்றன என்பதை நாம் பார்க்கிறோம். நமக்கும் பாகிஸ்தானுக்கும் இருக் கக்கூடிய உறவு பல சிக்கல்களை ஏற்படுத்தக்கூடியதாக இருக் கிறது. அந்தத் தொடர்பு நல்ல முறையில் சினேக முறையில் ஏற்படாமல், இன்னும் அடிக்கடி பல சச்சரவுகள் ஏற்பட்டுக்கொண் டிருக்கக்கூடிய வகையில் கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கக்கூடிய காரணத்தினால் இன்றைக்கு அந்தப் பிரிவினையின் காரணமாக சில பிரச்சினைகள் தீர்க்கப்பட்டாலுங் கூட இன்னும் சில பிரச்சினைகள் தொடர்ந்து நம்மைப் பிடித்துக் கொண்டிருக்கின்றன என்பதைத்தான் நாம் மனதிலே கொள்ள வேண்டும். அதையும் தொடர்ந்து தீர்த்து வைக்கவேண்டியது நம்முடைய கடமை. அதற்காகத்தான் நம்முடைய தேசியத் தலைவர்கள் அந்தப் பிரிவினையினால் ஏற்பட்ட சிக்கல்களை விடுவிப் பதற்கு இன்னும் தொடர்ந்து முயற்சி செய்தும்கூட அதிலே வெற்றி காணாத முறையில் பல சங்கடங்கள் தொடர்ந்து இருந்து வருகின்றன. அவ்வப்போது நமக்கும் பாகிஸ்தானுக்கும் இருக்கக் கூடிய உறவு—உடனடியாக இருக்கக்கூடிய உறவு மட்டுமல்ல, உலக அரங்கில்கூட அதன் பிரதிபலிப்புக்கள் ஏற்பட்டுக்கொண்டிருப் பதை அவ்வப்போது காண்கிறோம். அது ஒருபுறமிருக்க நம்முடைய நாட்டைப் பொறுத்த வரையிலே பல முக்கியமான திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு அதன் காரணமாக நாட்டி னுடைய ஒற்றுமை உறுதிப்படுத்தப்பட்டிருக்கிறது என்பதைத் தான் நான் வலியுறுத்த விரும்புகிறேன்.

முதன் முதலாக நாம் எடுத்துக்கொண்ட நடவடிக்கை—சர்தார் வல்லபாய் பட்டேல் அவர்கள் தலைமையின்கீழ் நம் நாட்டிலே யிருந்த பல்வேறு சிற்றரசுகளை நம்முடைய அரசியலமைப்பின்கீழ் கொண்டுவந்தது, ஒரு நாடு என்கிற முறையிலே ஒரு அரசிய லமைப்பின்கீழ் கொண்டுவந்தது, உலகத்திலேயே, உலக வரலாற்றி லேயே மிகச் சிறந்த சாதனை என்று எல்லோராலும் போற்றக்கூடியதாக இருக்கிறது. பிரித்தவர்களை எப்பொழுதும் வரலாற்றில் பெரிதுபடுத்துவதில்லை. இணைத்தவர்கள்தான் உலக வரலாற்றிலே உயர்ந்தவர்களாகக் கருதப்படுகிறார்கள். அப்படி இணைக்கும் சக்தியாக, இணைக்கக்கூடிய ஒரு பெரும் ஆற்றலைப் பெற்றவராக விளங்கின சர்தார் வல்லபாய் பட்டேல் அவர்கள், அவர்கள் திறமையின் காரணமாக, அவர்கள் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளின் காரணமாக, 500-க்கு மேல் இருந்த சிற்றரசுகள் நம்முடைய நாட்டின் அரசியலமைப்பின் கீழ் கொண்டுவரப்பட்டு,

[Sri C. Subramaniam] [13th November 1961

ஒரு நாடு, ஒரு அரசியலமைப்பு என்ற முறையிலே ஏற்பாடு செய்யப்பட்டது முதலிலே நாம் சாதித்த காரியங்களில் பெரிய காரியம் என்பதை நாம் மனதிலே கொள்ளவேண்டும். இப்பொழுது நாம் அதை ஓரளவு மறந்துவிடுகிறோம். சிற்றரசுகள் இருந்ததெல்லாம் கூட நம் கவனத்தில் இருப்பதில்லை. ஆனால், அன்றைக்கு அந்தச் சூழ்நிலையில், அந்நிய ஆட்சியிலிருந்து நாம் விடுபட்ட நேரத்தில் 500-க்கும் மேற்பட்ட சிற்றரசுகளுக்குப் பூரண சுதந்திர வாழ்க்கை உண்டு என்று அவர்களை விட்டுவிட்டுச் சென்றதற்குப் பிற்பாடு அவர்களை ஒன்றுபடுத்தினோம்—அதுவும் சமாதான முறையில் ஒன்றுபடுத்தினோம். எந்தவிதமான சிர்குலைவும் நம் நாட்டிலே ஏற்படாமல், சமாதான முறையில் நாம் அதைச் சாதித்தோம். ஏதோ ஒரு பகுதியில் ஒரு சிறு போலிஸ் நடவடிக்கை, இராணுவ நடவடிக்கை எடுக்க வேண்டியிருந்தது. அதுவும் ஒரு சிறு காலத்திற்குள்ளாக முடிந்துவிட்டது. ஆனால், பொதுவாக சமாதான முறையில் சமுதாயத்தில் எந்தச் சிர்குலைவும் இதன் காரணமாக ஏற்பட்டு விடாமல் அந்தப் பகுதிகளெல்லாம் ஒன்றாக இணைக்கப்பட்டது என்பது மாபெரும் சாதனை என்பதை நான் வலியுறுத்த விரும்புகிறேன். அவ்வாறு செய்தது முதல் சாதனையாகும்.

இரண்டாவது சாதனை—இந்த நாட்டினுடைய நிர்வாகத்தை ஒன்றாக இணைத்தது. வெள்ளைக்காரர்கள் ஆட்சி இங்கு இருந்த வரையில் அவர்களுடைய ஆட்சியின்கீழ் நிர்வாக அமைப்பில் இணைப்பு ஏற்படுத்தப்பட்டிருந்தது. அவர்கள் வெளியே சென்றபோது அந்த நிர்வாக அமைப்பு ஓரளவு முன்பு இருந்த பிரகாரம் இருக்க முடியவில்லை. ஆனால், அப்பொழுது உள்நாட்டு மந்திரியாக இருந்த சர்தார் வல்லபாய் படேல் அவர்கள்தான் அந்த நிர்வாக அமைப்பையும் சீர்படுத்தி, அகில இந்திய ரீதியில் இந்த அமைப்பை வைத்துக்கொண்டு, இணைக்கப்பட்ட ஒரு நிர்வாக அமைப்பாக இருக்கவேண்டுமென்று பல நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டார்கள். அப்பொழுது அதற்குப் பக்க பலமாக சட்டம் கூடக் கிடையாது. சட்டம் இயற்றாமலேயே பல்வேறு நடவடிக்கைகளை எடுத்து அதன் மூலமாக இந்த நிர்வாக அமைப்பை ஒன்றுபடுத்தக்கூடிய நிலைமையிலே அவர்கள் சீர்படுத்தினார் என்பதைப் பார்க்கும்போது, இந்த இரண்டு துறைகளிலேயும் அவர்கள் சாதித்தவை உலக வரலாற்றிலேயே முக்கிய இடம் பெறக்கூடிய நிகழ்ச்சிகள் என்பதைத்தான் நாம் மனதில் கொள்ள வேண்டும்.

அதற்கடுத்தபடியாக நான் கூற விரும்புவது—நமது இராணுவ அமைப்பைப் பற்றி. தேசீய இராணுவம் ஒன்றை அமைத்து, அது அரசியலில் கலந்துகொள்ளாத முறையில், அரசியலுக்கு அப்பாற்பட்டதாக இருக்கும் அளவுக்கு, இராணுவ அமைப்பு ஏற்படுத்தி, இராணுவம் தேசீய ஒற்றுமைக்கு ஏற்றதொன்றாக அமைத்துக்கொண்டது நாம் அடுத்தபடியாக சாதித்த சாதனையாகும்.

சுதந்திரம் பெற்றவுடனே உடனடியாக நாம் இதிலே வெற்றி பெற்ற காரணத்தால்தான் மற்றவர்கள் எதிர்பார்த்ததுபோல நம் நாட்டிலே குழப்பம் ஏற்பட்டுவிடாமல், உள்நாட்டுக் கலவரங்கள்

13th November 1961] [Sri C. Subramaniam]

ஏற்பட்டுவிடாமல் தொடர்ந்து, அமைதியான முறையிலே நாம் பல காரியங்களைச் சாதிக்க முடிந்தது, பல திட்டங்களை நிறைவேற்றுவதற்கு இந்த முதலிலே எடுத்துக் கொண்ட இந்த நடவடிக்கைதான் அடிப்படைச் சாதனைகளாக அமைந்திருக்கின்றன என்பதுதான் எல்லோருடைய கருத்தும் இன்றைக்கு. இந்த அடிப்படையில்தான் மற்றவைகளையெல்லாம் நாம் சாதிக்க முடிந்தது. ஆகவே, நமக்குச் சுதந்திரம் கிடைத்ததற்குப் பிற்பாடு அந்நியப் பிடிப்பு நீங்கினதற்குப் பிற்பாடு, நெல்லிக்காய் மூட்டை போல் ஒவ்வொரு பக்கமும் ஓடிவிடாமல் ஒன்றுபட்ட அமைப்பிலே, ஒன்றுபட்ட இந்தியாவாக இருப்பதற்கு இந்த மூன்று சாதனைகள்தான் நமக்குச் சாதகமாக இருந்தன, துணையாக இருந்தன என்று நான் மறுபடியும் வலியுறுத்திச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இந்த அடிப்படையில்தான் நம்முடைய நாட்டுக்கு எப்பேர்ப்பட்ட அரசியலமைப்பு இருக்கவேண்டும் என்பதைப் பற்றியும் நாம் ஆலோசனை செய்தோம். இந்தச் சாதனைகள் நடைபெற்றுக்கொண்டிருக்கக்கூடிய நேரத்திலே எப்பேர்ப்பட்ட அரசியலமைப்பு நமக்கு இருக்கவேண்டும் என்பதைப் பற்றியும் ஆலோசனை செய்ய ஆரம்பித்து, 1950-ம் வருஷம் ஜனவரி மாதம் 26-ம் தேதியிலிருந்து புதிய அரசியல் சட்டமும் இந்தியா முழுவதற்கும் பொருந்தக்கூடிய ஒரு அரசியல் சட்டமாக நிறைவேறியது, அடுத்தபடியாக ஏற்பட்ட பெரிய சாதனை. அதுவும் 1947-லே சுதந்திரம் பெற்று, 1949-க் குள்ளாக அந்தச் சட்டத்தை நாம் நிறைவேற்றியது உலகத்திலேயே வேறு எந்தக் காலத்திலும் எந்த நாட்டிலும் ஏற்படாத ஒரு மாபெரும் சாதனை என்பதை நாம் மனதிலே கொள்ளவேண்டும்.

உலகத்திலே முதன்முறையாக நாற்பது கோடி ஜனத்தொகை கொண்ட ஒரு மனித சமுதாயத்துக்கு ஜனநாயக அடிப்படையில் ஒரு அரசியல் அமைப்பை இவ்வளவு சீக்கிரத்தில் ஏற்படுத்திக் கொண்டது உண்மையிலேயே நாம் எல்லோரும் பெருமைப்படக் கூடிய விஷயமாகும். எந்த நாட்டை எடுத்துக்கொண்டாலும், ஏன் அமெரிக்காவிலும்கூட இதுபோன்று காலனி ஆட்சியை ஒழித்துவிட்டு விடுதலை அடைந்த பிற்பாடு ஒரு அரசியல் அமைப்பை ஏற்படுத்திக்கொள்வதற்கு பல ஆண்டுகள் பிடித்தன. எத்தனையோ சங்கடங்கள் உண்டாயின. ஆனால் இந்தியாவிலோ எத்தனையோ சங்கடங்கள், சுதேச சமஸ்தானங்களின் சிக்கல்கள் எல்லாம் இருந்தபோதிலும் மிகக் குறுகிய காலத்திற்குள்ளாகவே அரசியல் அமைப்புச் சட்டத்தை ஏற்படுத்திக்கொண்டது, என்றைக்குமே எல்லோருமே பெருமைப்படக்கூடியதாகும். அந்த அரசியல் அமைப்பில் ஆங்காங்கு திருத்தங்கள் ஏற்பட்டாலுங்கூட பொதுவாக நாட்டினுடைய அமைப்பை நிலை நிறுத்துவதற்கு—ஸ்டீல் ப்ரேம் **(Steel frame)** என்று சொல்வார்களே, அதுபோல இந்த அரசியல் அமைப்புச் சட்டம் அமைந்திருக்கிறது. அதுவும்கூட உலகம் எல்லாம் போற்றக்கூடிய அளவில்-- ஜனநாயகக் கொள்கைகள் எல்லாவற்றையும் ஒப்புக்கொண்டு

அமைந்திருக்கிறது. வேறு எந்த நாடும் கண்டிராத அளவில்—வயது வந்த ஆண், பெண் எல்லோருக்கும் வாக்குரிமை என்று வழங்கப்பட்டிருக்கிறது. படித்தவர்களானாலும், படிக்காதவர்களானாலும், பணக்காரர்களானாலும், ஏழைகளானாலும் இந்த நாட்டில் பிறந்தவர்கள் 21 வயதை அடைந்தவுடன் ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் வோட்டு அளிக்க உரிமை உண்டு என்று அளிக்கப்பட்ட சுதந்திரம் நம்முடைய மிகப்பெரிய சாதனைகளில் மற்றொன்றாகும். வயதுவந்தவர்களுக்கு எல்லாம் வோட்டுரிமை என்றவுடன் அது எப்படி சரியான முறையில் நடக்கும் என்று பலர் சந்தேகப்பட்டார்கள். 1950-ம் வருஷத்தில் அரசியல் அமைப்பு அமுலுக்கு வந்தது. 1952-லே முதல் தேர்தல் அதற்குப் பின் நடந்திருக்கிறது. 1957-லே இரண்டாவது தேர்தலும் நடந்து விட்டது. இந்த இரண்டு தேர்தல்களிலும் மிக அமைதியான முறையில் தேர்தலை மிக நன்றாக நடத்திக்காட்டியிருக்கிறார்கள் நம் மக்கள். கோடிக்கணக்கான மக்கள் பங்கெடுத்துக்கொண்ட அந்தத் தேர்தல் எவ்வளவு அமைதியான முறையில், நேர்மையான முறையில் வெகு சீக்கிரத்திலேயே நடந்திருக்கிறது என்பதைப் பற்றி—அப்போது இங்கே வந்திருந்த வெளிநாட்டு நிபுணர்களே பாராட்டியிருக்கிறார்கள். இந்த அடிப்படையில் மூன்றாவது தேர்தலும் நடக்க இருக்கிறது.

இன்னொன்றையும் நாம் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். ஜனநாயக அடிப்படையில் அரசியல் அமைப்பை வகுத்துக் கொண்டபோது பெடரல் அமைப்பு முறையாக நம் நாட்டு நிர்வாகம் இருக்கவேண்டும், நாடு முழுவதற்குமாக ஒரு அரசாங்கம், ஒரு மூலையில்—இந்தப் பெரிய நாட்டுக்கு இந்தப் பெரிய ஜனப் பகுதிக்கு, பல்வேறு பழக்கவழக்கங்கள், மொழிகள் கொண்ட ஜனங்களுக்கு இருப்பது என்பது—யூனிடரி கவர்ன்மெண்டு என்ற முறையில் அமைப்பது சரியாக இருக்காது என்ற முடிவுக்கு வந்து—இது பெடரல் அரசாங்கமாக—சமஷ்டி அரசாங்கமாக இருக்கவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. அந்த அந்தப் பகுதி மக்கள் அவரவர்களுடைய உரிமையைப் பெற்று அவர்களே வளம் செய்துகொள்வதற்கு பயன்படும் என்று இந்த முடிவு செய்யப்பட்டது.

இந்த அடிப்படையில் ஆரம்ப காலத்தில் ராஜ்யங்களை ஏ, பி, என்று பிரித்திருந்தோம். அதற்குப் பிற்பாடு இதே ராஜ்யங்களை மொழிவாரியாகப் பிரிக்கவேண்டுமென்று நடவடிக்கை எடுக்கப்பட்டது. மொழிவழி ராஜ்யங்களை அமைத்தபோது ஏ ஸ்டேட், பி ஸ்டேட் என்கிற நிலைமை எல்லாம் மாறி எல்லா ராஜ்யங்களும் ஒரே விதமான தகுதியைப் பெற்றிருக்கின்றன. இவையெல்லாம் ஒரே அரசியல் அமைப்புச் சட்டத்தின்கீழ் இயங்கி வருகின்றன.

இதோடு மட்டுமல்ல. நீதி நிர்வாகத்திலும் கீழ்க் கோர்ட்டில் இருந்து ஹைக்கோர்ட், சுப்ரீம் கோர்ட் என்று நீதி நிர்வாகத்தை—நிர்வாக அமைப்பில் இருந்து தனியாகப் பிரித்து இயங்கச் செய்திருக்கிறோம். இதன் காரணமாக நீதி ஸ்தலங்கள்

13th November 1961] [Sri C. Subramaniam]

இன்றையதினம் சுதந்திரமாக இயங்குகின்றன. நிர்வாகத்தில் ஏதாவது கோளாறு ஏற்பட்டாலும் நீதி ஸ்தலத்தில் அதை நிவர்த்தி செய்துகொள்ள வசதி இருக்கிறது. இவ்வளவு சீக்கிரமாக இவை யாவற்றையும் அமைத்துக்கொண்டு நாம் செயல்படுவதற்கு நாமே பெருமைப்படவேண்டும்.

அதற்கு அடுத்தபடியாக மொழிப் பிரச்சனை. நம்முடைய தேசம் பல மொழிகள் பேசுகின்ற தேசம் என்பதை நாம் முதலில் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். பலமொழிகள் பேசுகின்ற மக்கள் அத்தனைபேரும் ஒரு நாட்டிலே சேர்ந்து இயங்கி வருகிறபோது மொழிப் பிரச்சனை ஒரு சிக்கலாகவே இருந்து வருகிறது. அந்நியர்கள் ஆண்டபோது ஆங்கில மொழியை ஆட்சிமொழியாக வைத்து ஆண்டுவிட்டுப் போய்விட்டார்கள். ஆனால் நிர்வாக அமைப்பை வகுத்த ஒரு திட்டத்தை வகுத்துக் கொடுத்தார்கள்.

இன்றைக்கு நாம் சுதந்திரம் பெற்ற பிறகு—பல்வேறு பகுதி மக்களும், பல மொழி பேசக்கூடிய மக்களும் ஓர் அரசின் கீழ் இருக்கவேண்டுமென்றால் எல்லோருக்கும் பொதுவான மொழி ஒன்று இருக்கவேண்டும் என எண்ணப்பட்டது. எல்லாவற்றையும் யோசித்தபொழுது அரசியல் அமைப்புச் சட்டத்தை வகுத்துக்கொண்டபோது 1965 வரையில் ஆங்கிலமே நிர்வாக மொழியாக இருக்கட்டும் என்று தீர்மானித்தோம். அப்படி முடிவு எடுத்த காலத்தில் இருந்த சூழ்நிலையை மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். அப்போது இருந்த சூழ்நிலை அந்நிய மொழி போய் நம் நாட்டு மொழி ஒன்று நமக்குப் பொதுமொழியாக அமைய வேண்டும் என்பதுதான். இந்தக் கருத்து பரவலாக இருந்து வந்தது. அந்தச் சமயத்தில் சமயோசிதமாக ஆங்கிலமே 1965 வரையில் நிர்வாக மொழியாக இருந்துவரட்டும் என்று முடிவு எடுத்ததற்கு முக்கியமானவராக இருந்தவர் தமிழ்நாட்டைச் சேர்ந்த ஸ்ரீ என். கோபாலசாமி ஐயங்கார் அவர்கள்தான். அது குறித்து நாம் பெருமைப்படுகிறோம். 1965 வரையிலும் தொடர்ந்து ஆங்கிலமே நீடித்திருக்க வேண்டுமென்று முடிவு எடுக்கப்பட்டது அவர்களுடைய முயற்சியின் காரணமாகத்தான். அவர்களுடைய சாமர்த்தியம், அறிவின் காரணமாகத்தான் இந்தத் திட்டம் அன்றைக்கு வகுக்கப்பட்டு ஒருவரைத் தவிர மற்ற எல்லோராலும் அன்று ஒப்புக்கொள்ளப்பட்டது. 1965-ல் நிர்வாக மொழியாக இந்தி வரவேண்டுமென்று முடிவு செய்யப்பட்ட காலத்திலேயே மற்ற மொழிகளைப் பற்றியும் ஆலோசித்து, ஒரு மொழி மட்டும் தேசிய மொழி என்று இல்லாது எல்லா மொழிகளும் தேசிய மொழிகள் என்ற முறையில், அவைகளில் முக்கியமான 14 மொழிகளை அரசியல் சட்டத்திலேயே குறிப்பிட்டிருக்கிறோம். அப்போது அந்த முறையில் மொழிப் பிரச்னைக்குத் தீர்வு காண முற்பட்டோம். அதற்குப் பிற்பாடு எந்த முறையில் அமுல்படுத்துவது என்பதற்காகவும் ஐந்து வருஷத்திற்கு ஒரு முறை ஒரு கமிஷன் நியமிக்கப்பட வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. அவ்வாறு ஒரு மொழிக் கமிஷன் நியமிக்கப்பட்டு இது பற்றிப் பரிசீலனை செய்யும்

10 a.m.

[Sri C. Subramaniam] [13th November 1961

போது, 1965-க்குப் பிறகு இந்தி ஆங்கிலத்திற்குப் பதிலாக நிர்வாக மொழியாக வரவேண்டுமென்று முடிவு எடுத்து சட்டத்திலேயே இடம் பெற்றிருந்தபோதிலும்கூட, அதனால் பல சிக்கல்கள் ஏற்படும் என்ற காரணத்தால், மீண்டும் புனராலோசனை செய்து அதை மாற்றி, தொடர்ந்து 1965-க்குப் பிற்பாடும் ஆங்கில மொழியும் நிர்வாக மொழியாக இருந்து வரும் என்ற முடிவை எடுத்திருக்கிறோம். இன்றைக்கு நாட்டிலே இருக்கக்கூடிய நிலைமையை உத்தேசித்தே அந்த முடிவை எடுப்பதற்கு எதிராகப் பல்வேறு வாதங்கள், கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டிருந்த போதிலும்கூட, தொடர்ந்து ஆங்கிலம் நீடிப்பது எத்தனை காலத்திற்கு அவசியமோ அத்தனை காலத்திற்குத் தொடர்ந்து இருக்க வேண்டுமென்ற முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது. அதற்குச் சட்ட உருவம் கொடுக்கவேண்டுமென்பதும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இன்னொரு முக்கியமான விஷயமும் அப்போது ஒப்புக் கொள்ளப்பட்டது. எந்தக் கால அளவிற்குத் தொடர்ந்து ஆங்கிலம் இருக்கவேண்டுமென்பதைப் பற்றி யார் முடிவு செய்வது என்பது பற்றியும் எல்லோராலும் ஒப்புக் கொள்ளக்கூடிய கருத்து ஏற்பட்டிருக்கிறது. அது என்னவென்றால், இந்தக் கால அளவை நிர்ணயிக்கக்கூடியவர்கள் இந்தி பேசுகின்றவர்கள் அல்ல, இந்தி பேசாத மக்கள்தான். ஆங்கிலத்தை விட்டுவிடலாமா, கூடாதா என்பது பற்றி முடிவு செய்யக்கூடிய பொறுப்பும் அதிகாரமும் இந்தி பேசாத மக்களிடந்தான் இருக்கவேண்டுமென்ற இந்தக் கருத்து இன்றைக்கு அநேகமாக எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அதிலே ஒருசில கருத்து வேறுபாடுகள் இருந்தபோதிலும் கூட அந்த முடிவு ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகவே, இந்த

13th November 1961] [Sri C. Subramaniam]

நிர்வாக மொழி ஒருபுறமிருக்க, பாட மொழி ஒருபுறமிருக்க, ஒரு பகுதிக்கும் இன்னொரு பகுதிக்கும் இணைப்பாக ஒரு மொழி இருக்க வேண்டியது அவசியம். தற்போது அந்த மொழி ஆங்கில மாக இருக்கிறது. அதற்கு மேல், ஒருவருக்கொருவர் பேசித் தெரிந்துகொள்ள, நம்முடைய நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற் குச் செல்லும்போது மொழி பெயர்ப்பாளர்களைக் கொண்டு பேசிக் கொள்ளவேண்டிய நிலைமையைப்போல இல்லாமல், இணைப் பாக ஒரு மொழி இருக்கவேண்டுமென்றும், ஆங்கிலம் போகின்ற காலத்திலே வேறு ஒரு பொது மொழி வேண்டுமென்ற காரணத்தால் இணைப்பு மொழியாக இந்தி இருக்கவேண்டுமென்ற முடிவுக்கு வந்திருக்கிறோம். இந்த முறையில் நாம் இன்றைக்கு மொழிப் பிரச்னைக்குத் தீர்வு காண முடிவு செய்திருக்கிறோம். இந்த முறையில் மொழிப் பிரச்னைக்குத் தீர்வு காணக்கூடிய முறையில்தான், மொழிவாரி மாகாணங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இதுதான் இந்தத் துறையில் நாம் அடைந்திருக்கும் கட்டம்.

இதற்கு மேலாக இன்றைக்கு நாட்டை இணைக்கக்கூடிய அளவுக்கு மாபெரும் சக்தியாக இருப்பது "எகனமிக் டெவலப் மெண்ட் த்ரு ப்ளானிங்"—திட்டமிட்ட அடிப்படையில் பொரு ளாதார வளர்ச்சியை அடைவது என்பதுதான். இன்றைக்கு நாடு முழுவதும் திட்டத்தைப் பற்றி விவாதிக்கும் சூழ்நிலை ஏற்பட் டிருக்கிறது. இன்னும் அதிகமான அளவுக்குத் திட்டம் வேண்டு மென்று கேட்கக்கூடிய நிலைமை எங்கும் ஏற்பட்டிருக்கிறது. சட்ட சபையில் மட்டுமல்ல, சிறு சிறு கிராமங்களில்கூட விவசாயிகள், தொழிலாளர்கள், பாமர மக்கள் திட்டத்தின் பல்வேறு அம்சங் களைப் பற்றிப் பேசவும், விவாதிக்கவுமான சூழ்நிலை ஏற்பட்டிருக் கிறது. இன்றைக்கு நாட்டை ஒன்றுபடுத்தக்கூடிய பெரிய பொரு ளாதார சக்தியாகத் திட்டம் விளங்குகிறது என்பதை வலியுறுத் திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். திட்டமானது பொருளா தார முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்படு வதாக இருப்பினும், மற்றத் துறைகளிலும்கூட நாட்டை ஒன்று படுத்தக்கூடிய பெரும் சக்தியாக இன்றைக்கு விளங்குகிறது என்பதை உணருகிறோம். அந்த அடிப்படையில்தான் இன்றைக் குத் திட்டமிட முன்வந்திருக்கிறோம். நேற்று திட்டத்தைப் பற்றிப் பேசும்போது திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள் ஒரு கருத்தை எடுத்துச் சொன்னார்கள். "திட்டம் என்பது பட்டியல் போட்டுக் காட்டுவதல்ல, ஒரு நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டதாக இருக்க வேண்டும்" என்று கூறி னார்கள். அதை நான் மிகவும் வரவேற்கிறேன். திட்டம் என்பது ஒரு அடிப்படையான நோக்கத்தை, லட்சியத்தை அடைவதற்காக அமைத்துக்கொண்ட பாதையாக இருக்க வேண்டும். இன்னொரு கருத்தையும் அவர்கள் சொன்னார்கள். அந்த மாதிரி நோக்கத் துடன் திட்டமிடும்போது "அதிலே ஏற்றத்தாழ்வுகள் இருக்கக் கூடாது, தனி மனிதனுக்கிடையேயோ, பிராந்தியங்களுக் கிடையேயோ ஏற்றத்தாழ்வுகள் இருக்கக்கூடாது" என்று

[Sri C. Subramaniam] [13th November 1961

எடுத்துப் பேசினார்கள். அதையும் நான் ஒப்புக் கொள்ளுகிறேன். இதுதான் திட்டத்தினுடைய நோக்கம் என்று திட்டக் கமிஷன்கூட ஒப்புக்கொண்டிருக்கிறது. மத்திய சர்க்கார் ஒப்புக்கொண்டிருக்கிறது. திட்டத்தைப் பற்றி நம் சபையிலே வைக்கப்பட்டிருக்கும் அறிக்கையிலும் இந்தப் பொது நோக்கு ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகவே, இன்றைக்கு ஏற்றத் தாழ்வுகளை நீக்க வேண்டுமென்று சொல்லும் போது, தனி மனிதர்களுக்கிடையே இருக்கக்கூடிய ஏற்றத் தாழ்வுகளை நீக்க வேண்டுமென்றால் பிராந்தியங்களுக்கிடையே உள்ள ஏற்றத்தாழ்வுகளை நீக்காமல் முடியாது. அந்த முறையில்தான் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. எப்படி நாம் மூன்றாவது தேர்தலுக்குத் தயாராக இருக்கிறோமோ, அதேபோன்று பொருளாதாரத் திட்டத்திலும் இரண்டு திட்டங்களை நிறைவேற்றிவிட்டு, ஓரளவு வெற்றிகரமாக நிறைவேற்றி விட்டு, இன்றைக்கு மூன்றாவது திட்டத்தை உருவாக்கி அதை நிறைவேற்ற முன் வந்திருக்கிறோம். இந்தத் திட்டமானது நாட்டை இணைப்பதில் பெரியதொரு சக்தியாக அமைந்து நாட்டை ஒன்றுபடுத்தக்கூடிய நிலை ஏற்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அதோடு மட்டுமல்ல. இன்றைக்கு ஒரு நாடு என்று சொல்லும் போது, அந்த நாடு தனித்து வாழ முடியாது. இன்றைக்கு உலக அரங்கில் ஏற்படும் நிகழ்ச்சிகள் காரணமாக எந்த நாடும் தனித்து இயங்க முடியாமல் உலக அரங்கில் பங்கு கொள்ளக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. நாம் விரும்பினாலும்கூட இன்றைக்கு தனித்து வாழ முடியாது. அது இருக்கட்டும். இன்றைக்கு பலம் பொருந்திய—ரொம்பவும் முன்னேறியிருக்கக் கூடிய எந்த நாடும் கூட, அமெரிக்காவை எடுத்துக்கொண்டாலும், ரஷ்யாவை எடுத்துக் கொண்டாலும் அவைகளும்கூட—எவ்வளவு பலம் இருந்தாலும்கூட பொருளாதார சக்தி இருந்தாலும்கூட—தனித்து வாழ முடியாது. இன்றைக்கு எல்லா நாடுகளும் உலக அரங்கில் சேர்ந்து இயங்கியாக வேண்டியிருக்கிறது. அந்த முறையிலே உலக அரங்கிலே 10 ஆண்டுகளுக்குள், சுதந்திரம் பெற்றதற்குப் பிறகு நாம் சாதித்திருப்பது என்ன, நமது வெளி நாட்டுக் கொள்கை எந்த முறையில் அமைந்திருக்கிறது என்று பார்க்கும்போது இன்றைக்கு—இதைப் பற்றி, கொஞ்சகாலத்திற்கு முன் நமக்குள் கருத்து வேற்றுமை இருந்தாலும்—பொதுவாக வெளிநாட்டுக் கொள்கை எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய முறையில் அமைந்திருப்பது மட்டுமல்ல, நல்ல முறையில் வெற்றி பெற்று வருகிறது. சமீபத்தில் நமது நாட்டுப் பிரதமர் பெல்கிரேட் சென்றிருந்தபோது, ரஷ்யா சென்றிருந்தபோது, இன்று அமெரிக்கா சென்றிருக்கும்போது, இன்றைக்கு எவ்வளவு உன்னதமான வெற்றியடைந்திருக்கிறது என்பதில், நம் நாட்டின் பெருமை உலக அரங்கில் எந்த அளவு உயர்ந்திருக்கிறது என்பதைப் பார்க்கிறோம். இதற்கு தனிப்பட்ட முறையில் நமது பிரதமர் பெரும் பொறுப்பு என்று இருந்தாலும், இது தனிப்பட்டவர் என்ற முறையில் ஏற்பட்ட சிறப்பு என்று மட்டும் எடுத்துக் கொள்ளக்கூடாது. முக்கிய காரணம், அவர்கள்

13th November 1961] [Sri C. Subramaniam]

உருவாக்கிய, பொதுவாக இருக்கக்கூடிய வெளி நாட்டுக் கொள்கை யாகும். உலக அரங்கில் ஏற்பட்ட சிக்கல்களுக்கு தீர்வு காணவும், நாடுகளுக்குள் ஒத்துழைப்பை வளர்ப்பதற்கும் நம் கொள்கை உதவியது என்று பார்க்கும்போது இன்றைக்கு உள் நாட்டிலே நாம் எடுத்த பல்வேறு முயற்சிகள், ஆற்றிய பல்வேறு சாதனைகள் ஒருபுறம் இருக்க, உலக அரங்கிலேயும் இன்றைக்கு இந்தியா என்று சொல்லக்கூடிய ஒரு நாடு ஒன்றுபட்ட சக்தியாக, ஒன்றுபட்ட சமுதாயமாக இருந்து, அதனுடைய வெளி நாட்டுக் கொள்கை அமைந்து, உலக அரங்கில் நல்லதொரு விளைவைக் கொண்டுவர இயங்கி வருகிறது என்று பார்க்கிறோம். இவைக ளெல்லாம் நாம் சாதித்த சாதனைகளின் அடிப்படையாக இருக்கக் கூடியவை.

அடிப்படை கருத்துக்களில் ஏதாவது கோளாறுகள் ஏற்பட்டனவா, தவறுகள் ஏற்பட்டு விட்டனவா, சிக்கல்கள் ஏற் பட்டனவா என்று பரிசிலனை செய்து பார்க்கும்போது, அடிப்படை யான சாதனைகளால், அடிப்படையாக ஏற்படுத்தியிருக்கக்கூடிய அமைப்புகளால்—பல நிபுணர்கள், உலகத்தில் பல பகுதியில் இருப் பவர்கள் இதை ஆராய்ந்து அலசிப் பார்த்திருக்கிறார்கள்— எந்தவிதமான குறைபாடும் இல்லை, எந்தவிதமான கோளாறுகளும் இல்லை என்றுதான் அவர்களும் கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். இவ்வாறு அடிப்படையாக நாம் தேசிய ஒற்றுமையை அதிகப்படுத் தக்கூடிய முறையிலே சாதனைகளைச் சாதித்திருந்தாலும், பல்வேறு அமைப்புகளை ஏற்படுத்திக்கொண்டிருந்தாலும், சில சக்திகள் ஆங்காங்கு நாட்டிலே இருக்கக்கூடிய சூழ்நிலையைப் பாதிக்கக் கூடிய முறையிலே இயங்கி வந்திருக்கின்றன என்பதை ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும். நாம் எடுத்துக்கொண்ட முயற்சி கள் காரணமாகவே இந்த சக்திகள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை நான் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். பழைய காலம் மாதிரி அடிமைகளாகவே இருந்திருந்தால் இந்தப் பிரச்சினைகள் தோன்றி யிருக்காது. சுதந்திரம் பெற்ற பிறகு பல காரியங்களைச் சாதித்த தன் காரணமாக, எடுத்த முயற்சிகளின் காரணமாக, அதிலிருந்து பல புதிய பிரச்சினைகள் தோன்றியிருக்கின்றன என்று நாம் பார்க்கிறோம். அது வளர்ச்சியின் இயற்கை, வளர்ச்சியின் தத்துவம், வளர்ச்சியின் இயற்கை விதி என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

வளர்ச்சி காரணமாகவே பல பிரச்சினைகள் பொருளா தாரமானாலும் சரி, தனி மனிதன் ஆனாலும் சரி, தோன்று கின்றன. பிரச்னை இல்லாமலிருந்தால் வளர்ச்சி இருக் காது. பிரச்னை இல்லாமல் வளர்ச்சி ஏற்படவேண்டுமென்று சொல்லுவது இயற்கைக்கு விரோதமானது. வளர்ச்சி என்றால் மாறுதல் ஏற்பட்டுத்தான் ஆகவேண்டும்—அதற்கான பிரச்சினைகளும் ஏற்பட்டுத்தான் தீரும். பிரச்சினைகள் இல்லாது மாற்றங்கள்—முன்னேற்றங்கள்—ஏற்படவேண்டுமென்று சொன் னால், அது முடியாது. ஆகவே, எடுத்த முயற்சிகள்

[Sri C. Subramaniam] [13th November 1961

காரணமாகவே, நாம் சாதித்த சாதனைகள் காரணமாகவே,
ஆங்காங்கு சில பிரச்சினைகள் தோன்றியிருக்கின்றன. உதாரண
மாக இன்றைக்கு மொழிப் பிரச்சினையை எடுத்துக்கொள்ளுங்கள்.
ஜனநாயக அடிப்படையில் நம் அரசாங்கம் நடைபெறவேண்டு
மென்று சொன்னால் மொழி அடிப்படையில் நம் ராஜ்யங்களை மாற்றி
அமைக்கவேண்டுமென்று நாம் முயற்சி செய்தோம். இது தவறான
கருத்து என்று யாரும் சொல்ல முடியாது. இது பல ஆண்டு
களுக்கு முன் மகாத்மாஜி அவர்கள் வற்புறுத்தியது. இதிலே
தனித்தனி மொழி ராஜ்யங்கள் அமையவேண்டுமென்பதில் ஒரு
சில கருத்து வேறுபாடுகள் இருந்தாலும், இது முழுவதும் தவறு
என்று யாரும் சொல்லமுடியாது. அதுவும் மொழிப் பிரச்னை தீர
எடுத்துக்கொள்ளும் நடவடிக்கை என்று எல்லோரும் ஒப்புக்
கொள்ளக்கூடியது. இந்தக் காரணத்தினால் இன்றைய தினம் பல
பிரச்சினைகள் வந்திருக்கின்றன. என்ன பிரச்சினை? இப்போது நம்
சென்னை ராஜ்யத்தை எடுத்துக்கொள்ளுங்கள். முன்பு ஆந்திராப்
பகுதி இங்கு சேர்ந்திருந்தது, கன்னடப் பகுதி சேர்ந்திருந்தது,
மலையாளப் பகுதி சேர்ந்திருந்தது, நம் தமிழ்நாடும் சேர்ந்திருந்
தது. இது நான்கு மொழி ராஜ்யமாக அமைந்திருந்தது. அப்போது
நான்கு மொழிகள் பேசுகிறவர்களுக்கும் பொதுவான ராஜ்யமாக
அமைந்திருந்தது. இன்றைக்கு தமிழ்நாடு என்று பிரித்தவுடனே
இங்கே கன்னடம் பேசுகிறவர்கள் இல்லாமல் போய்விடவில்லை—
இருக்கிறார்கள். கன்னடம் பேசுகின்றவர்கள் சிறுபான்மையாக
இருக்கக்கூடிய நாடாகிவிட்டது தமிழ்நாடு; மலையாளம் பேசுகிற
வர்கள் சிறுபான்மையாக இருக்கக்கூடிய நாடு தமிழ்
நாடு; தெலுங்கு பேசுகிறவர்கள் சிறுபான்மையாக இருக்
கக்கூடிய நாடு தமிழ்நாடு, மொழிவாரி ராஜ்யம் அமைந்த
காரணத்தினால் சிறுபான்மையினராகிவிட்டார்கள் தெலுங்கு
பேசக் கூடியவர்கள்; சிறுபான்மையினராகிவிட்டார்கள் கன்னடம்
பேசக்கூடியவர்கள்; சிறுபான்மையினராகிவிட்டார்கள் மலையா
ளம் பேசக்கூடியவர்கள். ஆக இந்தப் பிரச்சினை இங்கு வந்ததற்
குக் காரணமே மொழிவாரி ராஜ்ய அமைப்புத்தான். இது இல்லாம
லிருந்தால் இவர்களெல்லோரும் இங்கே நம் மொழியும் ராஜ்யத்
தின் பொது மொழிகளுள் ஒன்று என்ற முறையிலே முன்பு இருந்த
மாதிரி இருந்துகொண்டிருப்பார்கள். இந்தப் பிரச்னை ஏற்படுவ
தற்கு அது காரணமாக இருந்திருக்கிறது. அதோடு மட்டுமல்ல.
இன்றைக்கு ஆங்காங்கு எல்லை வகுக்கவேண்டுமென்பதில் தகராறு
கள் ஏற்பட்டிருக்கின்றன. சில இடங்களில் அவைகள் இன்னும்
தீராமல்கூட இருக்கின்றன. எல்லைக்கோடு எப்படிப் போட
வேண்டுமென்பதில் கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டிருக்கின்றன—
இதனால் சர்ச்சைகள் ஏற்பட்டிருக்கின்றன. அது மட்டுமல்லாமல்
மொழிப் பிரச்னை காரணமாக சிறுபான்மை மொழியினர் இருப்ப
தால் அவர்களுடைய உரிமைகள் என்ன, தமிழ்நாட்டில் இருக்கக்
கூடிய தெலுங்கர்களின் அதிகாரங்கள் என்ன, உரிமை என்ன,
அதே மாதிரி கன்னடக்காரர்களின் உரிமை உரிமை என்ன, அதே
மாதிரி மலையாளம் பேசுகின்றவர்களின் உரிமை என்ன என்ற
பிரச்சினை ஏற்பட்டிருக்கிறது.

13th November 1961] [Sri C. Subramaniam]

அஸ்ஸாம் நாட்டை இன்றைக்கு எடுத்துக்கொண்டால் அங்கே இருக்கக்கூடிய வங்காளி பேசுகின்றவர்களுக்கு என்ன உரிமை இருக்கிறது, அஸ்ஸாமீஸ் பேசுகின்றவர்களுக்கு என்ன உரிமை இருக்கிறது, இரண்டு பேர்களுக்கும் மத்தியில் உள்ள தொடர்பு என்ன என்ற முறையில் இம்மாதிரி சிக்கல்கள் ஏற்படுகின்றன. மொழிவாரி மாகாணங்கள் ஏற்பட்ட காரணத்தினால் தம் தம் மொழியின் பேரில் பற்று அதிகமாக ஏற்படுகின்ற நிலைமையும் ஏற்பட்டது. அதோடு, அது பற்றோடு இருந்து விடாமல் வெறியாகவும் சில இடங்களிலே மாறியது. மொழி வெறி காரணமாக கலவரங்கள் ஏற்படக்கூடிய நிலைமையும் ஏற்பட்டது. மற்ற இடங்களில் சிறு சிறு கலவரங்கள் ஏற்பட்டுக் கொண்டு இருந்தாலும் சமீபத்தில் அஸ்ஸாமில் மொழி அடிப்படையில் சில கலவரங்கள், மொழிப் பிரச்சினை மிகவும் சிக்கலான பிரச்சினை என்று தோன்றக்கூடிய நிலையில் அங்கு ஏற்பட்டது மாத்திரமல்லாமல், பெரிய கலவரமாக ஏற்பட்டு, அதோடு ஆங்காங்கு குழப்பமான நிலைமையும் ஏற்பட்டு மொழிப் பிரச்சினை நாட்டுப் பிரச்சினையாகத் தென்படக்கூடியதாக ஏற்பட்டது.

அதேமாதிரி இன்றைக்கு அதிகாரத்தை மக்களிடத்தில் ஒப்படைத்திருக்கிறோம்—21 வயது வந்த ஆண்களிடத்திலும், பெண்களிடத்திலும் ஒப்படைத்திருக்கிறோம். இருபத்தொன்று வயது வந்த ஆண்கள், பெண்கள் எல்லோருக்கும் ஓட்டு உரிமை உண்டு என்று சொல்லும்போது அவர்களுடைய பெருவாரியான ஆதரவைப்பெற்றுத்தான் சட்டசபைக்கு வர முடியும். யார் சட்ட சபையில் பெரும்பான்மையினராக இருக்கிறார்களோ அவர்கள்தான் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள முடியும் என்று ஏற்பாடு செய்திருக்கிறோம். எல்லோருக்கும் வாக்குரிமை கொடுத்தவுடனே, அவர்களுடைய ஆதரவை எப்படிப் பெறுவது என்ற முறையில் பல்வேறு சிக்கல்கள் கிளம்ப ஆரம்பித்தன. சாதியை ஒழிக்கவேண்டுமென்று அந்தப் பணியில் நாம் இப்போது ஈடுபட்டிருக்கிறோம். சாதியை ஒழிக்கவேண்டும் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிறோம். இருந்தாலும் எல்லோருக்கும் உரிமை--வாக்குரிமை—கொடுத்ததன் காரணமாக, எப்படி சட்டசபைக்கு வருவது, எப்படி அதிகாரத்தைக் கைப்பற்றுவது என்ற அடிப்படையில் புதிய சிக்கல் ஏற்பட்டு சாதி அடிப்படையில் ஜெயிக்க முடியுமா என்று ஒரு சிலர் நினைப்பது இயற்கைக்கு விரோதம் என்று சொல்ல முடியாது—ஆனால் தவறு என்று சொல்ல விரும்புகிறேன். அந்த அடிப்படையில் ஆரம்பித்து சாதியை ஒழிப்பதற்குப் பதில் ஜனநாயக அடிப்படையில் எல்லோருக்கும் வாக்குரிமை என்ற அடிப்படையில் இயங்க ஆரம்பித்தபோது சாதி வேறு ரூபத்தில், அரசியல் ரூபத்தில், தலை காட்ட ஆரம்பித்திருக்கிறது. அதற்கு ஜனநாயகத்தை குறை கூற முடியுமா—எல்லோருக்கும் வாக்குரிமை கொடுத்ததுதான் தவறு என்று சொல்ல முடியுமா? இப்போது போகக்கூடிய போக்கைத் தடுத்து அதைத் தவிர்க்க வேண்டுமென்று சொல்லுவதுதான் சரியாகும்.

[Sri C. Subramaniam] [13th November 1961

அதோடு மட்டுமல்ல, மத அடிப்படையிலும் இன்றைக்கு பிளவு சக்திகள் ஏற்பட்டிருக்கின்றன. இன்றைக்கு முஸ்லீம்கள் பிரிந்துபோய் பாகிஸ்தான் அமைத்துக் கொண்டபோதிலும்கூட, இன்னும் பல பகுதிகளிலே அவர்கள் வாழ்கிறார்கள். சில பகுதி களிலே பெரும்பான்மையினராகவும் வாழ்கிறார்கள். ஜாதியின் அடிப்படையிலே, மதத்தின் அடிப்படையிலே ஓட்டு கேட்கப்படு கின்றது. இப்படி ஓட்டுக் கேட்கும்போது, சமூகத்திலே கலவரங்கள் ஏற்படுகின்றன. இதை விளக்கக்கூடிய முறை யிலே ஜபல்பூரிலே இந்து-முஸ்லீம் கலவரங்கள் ஏற்பட்டன. இதைப்போல் இன்னும் வேறு சில இடங்களிலேயும் கலவரங்கள் ஏற்பட்டன. ஆகவே, இன்றைக்கு மொழிப் பிரச்னே, ஜாதிப் பிரச்னே, மதப் பிரச்னே ஆகியவைகளின் அடிப்படையிலே ஆங்காங்கு கலவரங்கள் நிகழ்ந்து கொண்டு வருவதை நாம் பார்க் கின்றோம். ஆனல் இதிலே நாம் எடுத்துக்கொண்ட முயற்சி தவறல்ல. அதன் காரணமாக பல போக்குகள், சக்திகள் கிளம்பி யிருக்கின்றன. இத்தகைய சக்திகள் கிளம்புவது இயற்கையே. இந்த தீய சக்திகளை அடக்குவது எப்படி என்பதுதான், ஒழிப்பது எப்படி என்பதுதான் இன்றைக்கு நம் முன்னுலுள்ள பெரும் பிரச்னே. முக்கியமாக தேர்தல் காலங்களிலேதான் இந்த தீய சக்திகள் அதிகமாகத் தலை தூக்குகின்றன. அப்படி தேர்தல் காலங்களிலே ஏற்படக்கூடியது சரியான போக்கல்ல. இந்தப் போக்கு நாட்டை சீர்குலைக்கக் கூடியதே.

இந்த முறையிலே நாட்டில் சில கிளர்ச்சிகள் ஏற் பட்டபோதிலும், இவை சமுதாயத்தை எப்படி பாதிக் கின்றது என்பதையும் நாம் கவனிக்கவேண்டும். சமுதாயம் எப்படி அமைகின்றது என்பதைப் பார்க்க வேண்டும். மக்கள் எப்படியோ, அப்படித்தான் சமுதாயம் உருவா கின்றது. இந்த சமுதாயத்தை வருங்காலத்திலே அமைக்கக் கூடியவர்கள் நம் நாட்டிலே உள்ள குழந்தைகள், இளைஞர்கள். இந்த இளைஞர்களை நாம் எப்படி உருவாக்குகின்றோமோ, அந்த வகையிலேதான் சமுதாயம் அமையப் போகின்றது. ஆனல் இப் போதுள்ள சமுதாயத்திலே இம்மாதிரியான பல நிகழ்ச்சிகளும் அவர்களிடையேயும் பிரதிபலிக்க ஆரம்பித்து விட்டன. கல்வி நிலையங்களிலேயும் இந்த மொழிச் சண்டை, ஜாதிச் சண்டை, மதச் சண்டை ஆகியவை தலைதூக்க ஆரம்பித்திருக்கின்றன. இதன் காரணமாக நம்முடைய தமிழ் நாட்டிலே பெரிய நிகழ்ச்சி கள், பெரிய சம்பவங்கள் நடைபெறுவிட்டாலும் வடக்கிலே பல சர்வகலாசாலைகள் மூடப்படக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதேபோல் இன்னும் சில மாகாணங்களிலேயும் இவ்வித நிகழ்ச்சி கள் ஏற்பட்டன. அதைப் பார்த்து இங்கும் ஒரு சில இடங்களிலே வேலை நிறுத்தம் போன்றவைகள் செய்யப்பட்டன. இந்த விதத் திலே இங்கும் சமுதாயத்திலே பிற்போக்கு சக்திகள், பிற்போக்கு நிகழ்ச்சிகள் தலைகாட்ட ஆரம்பித்திருக்கின்றன. வளர்கின்ற சமுதாயத்திலேயே இவ்வித கிள்ர்ச்சிகள் ஏற்படுமானல், தொடர்ந்து சமுதாயம் வளரும்போதும் இவ்வித மனப்பான்மை தான் வளர்ந்துகொண்டு போகும்.

13th November 1961] [Sri C. Subramaniam]

கல்விப் பிரச்னையின் மூலம்தான் நாட்டைச் சீர்படுத்த முடியும். அதற்காகத்தான் இதிலே முக்கிய கவனம் செலுத்தவேண்டு மென்று நாம் நினைக்கிறோம். இந்த நிலைமையிலே எப்படி இதற்குத் தீர்வு காண்பது என்பதுதான் இப்போது பிரச்னை யாக இருந்து வருகிறது.

ஆகவே, அஸ்திவாரத்தைப் பலப்படுத்த வேண்டுமானால், அடிப் படையிலேயே இவ்வித பிளவு சக்திகளை வளரவொட்டாமல், ஆரம்ப காலத்திலே இவற்றையெல்லாம் எப்படி அடக்குவது என்பதற்கு தக்க நடவடிக்கைகள் எடுப்பதற்காகத்தான் இந்த மகாநாடுகள் அவ்வப்போது கூட்டப்படுகின்றன. இதற்கு எப்படித் தீர்வு காணவேண்டுமென்பதுதான் முக்கியமாக நாம் யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. அதைத்தான் நாம் முக்கிய மாக முதலிலே யோசிக்க வேண்டியிருக்கிறது.

முதலிலே எடுத்துக் கொண்டால், ராஜ்ய பஸ்களுக்கு ராஜ்யங் களிடையே இன்றைக்கு பலத்த போட்டி இருந்து வருகிறது. ஒவ் வொருவரும் தங்கள் தங்களுடைய பிராந்தியங்களை, ராஜ்யங்களைப் பற்றித்தான் நினைக்கிறார்கள். அப்படி நினைக்கும்போது, அதன் காரணமாக பல சிக்கல்கள் ஏற்படுகின்றன. இங்கு தமிழ் நாட்டைப் பொறுத்த வரையிலே பார்ப்போமானால், தமிழ் நாட்டிலே நான் மந்திரியாக இருக்கிறேன், என்னுடன் நீங்களும் இந்த சபையின் அங்கத்தினர்களாக இருந்து, நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து பல அபிவிருத் தித் திட்டங்களை ஏற்படுத்தி, தமிழ் நாட்டை நாம் வளப்படுத்த வேண்டுமென்று நினைக்கிறோம். அப்படி நினைப்பதிலே தவறு ஒன்றுமில்லை. அப்படி நினைக்காமல் இருந்தால்தான் தவறு. ஆனால் அவ்வாறு நினைக்கின்ற காரணத்தினாலே, மற்ற ராஜ்யங் களின் மேல் வெறுப்போ, துவேஷ மனப்பான்மையோ ஏற்படக் கூடாது. அப்படி ஏற்பட்டால், அதுதான் சிக்கல் ஏற்படக்கூடிய நிலைமையை உண்டாக்குகின்றது. அப்படி ஒரு மனப்பான்மை ஏற்பட்டு இயங்குமானால், அப்போதுதான் நம் நாட்டின், நம் ராஜ்யத்தின் பேரில் நமக்கு இருக்கக்கூடிய ஆக்க சக்தியே, அழிவு சக்தியாகவும் ஆகிறது. நாம் அப்படி நினைக்கும்போது, மற்றவர் களும் அப்படி நினைக்காமலா இருப்பார்கள்? அப்படி நினைக்கும் போதுதான் இரண்டுக்கும் மோதல் ஏற்பட்டு, அதன் காரணமாக நாட்டை முன்னேற்ற வேண்டுமென்கின்ற எண்ணமே, அழிவுச் சக்தியாகவும் ஆகிவிடுகின்றது. இதைப் போக்குவது எப்படி என்று பார்க்கும்போது, பல பேர் பலவிதமான பரிகாரங்களைச் சொல்கிறார்கள். அதிலே ஒரு சிலர், இப்படி பல பகுதிகளாக இருப்பதுதான் இதற்கெல்லாம் காரணம். ஆகவே, சமஷ்டி அடிப் படையில் யில்லாது இந்தியா பூராவுக்கும் ஒரே அரசாக ஏற் படுத்தவேண்டுமென்று சொல்கிறார்கள். அதாவது டெல்லியிலே மட்டும் ஒரு அரசாங்கம் நடந்து வந்தால் போதுமென்று சொல்கிறார்கள். இன்றைக்கு நான் சொல்ல விரும்புகிறேன் உலகத்திலே நம்முடனேயே நம் காலத்திலேயே பல நாடுகள்

சுதந்திரம் பெற்று இன்றைக்கு இயங்கிக்கொண்டு வருகிறது. அங்கெல்லாம் சமஷ்டி அடிப்படையில் நடந்துகொண்டுவரும் அரசாங்கங்களேயும் பாருங்கள், நம் நாட்டையும் பாருங்கள். நம் நாட்டிலே இந்தியாவானது பல ராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் தனியாக சட்டசபை ஏற்படுத்தி, தனித்தனியாக நிர்வாகம் ஏற்படுத்தி, பரவலான முறையிலே ஆட்சி நடைபெற்றுவருகிறது. இப்படி பரவலான முறையிலே ஆட்சி நடக்கின்ற காரணத்தினுலேதான், நம்முடைய நாட்டிலே ஒரு உறுதியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. எங்கெங்கெல்லாம் இது தேவையில்லை என்று எண்ணப்பட்டு ஒன்றுபட்ட அரசாங்கம் அமைக்கப்பட்டனவோ, அங்கெல்லாம் இன்றைக்கு ஒரு குழப்பமான நிலைமை ஏற்பட்டுக்கொண்டு இருப்பதைக் காண்கிறோம். உதாரணமாக, இந்தோனேஷியாவை எடுத்துக் கொண்டாலும் சரி, கிழக்கு நாடுகள், மத்திய கிழக்கு நாடுகள் ஆகியவைகளை எடுத்துக் கொண்டாலும், அங்கெல்லாம் இப்போது குழப்பமான நிலைமைதான் இருந்துகொண்டு வருகிறது. அதோடு மட்டுமல்ல. இன்றைக்கு பாகிஸ்தானை எடுத்துக்கொண்டால், முதலிலே நம்மைப் பின்பற்றுவதாக இருந்தும், பின்னுலே ஒரு ராஜ்யமாக ஏற்படும் நிலைமை ஏற்பட்டதால், இப்போது என்ன ஆயிற்று? இப்போது முன்பிருந்த அரசாங்கம் மாறி, ராணுவ சர்வாதிகார ஆட்சியே அங்கு ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, இன்றைக்கு ஜனநாயக அடிப்படையிலே வாழ வேண்டுமானுல், தொடர்ந்து அரசாங்கம் நடக்க வேண்டுமானுல், அந்தந்தப் பகுதியிலே இருக்கக்கூடிய, அந்தந்தப் பிரதேசத்திலே இருக்கக்கூடிய சூழ்நிலைக்குத் தகுந்தபடி ராஜ்யங்களைப் பிரித்து அமைக்கவேண்டுமே தவிர, ஒன்றுபட்ட அரசாங்க முறையில் **(Unitary State)** அமைப்பது சரியான முறையல்ல என்பதை உலக நிகழ்ச்சிகள் நிரூபித்துக் காட்டியிருக்கின்றன.

இன்றைக்கு காங்கோவை எடுத்துக் கொண்டால், அங்கு ஏற்பட்டிருக்கக்கூடிய சிக்கலுக்கு ஓர் தீர்வு காண முடியாமல், ஒரு பெரும் போரே நடந்துகொண்டிருக்கிறது. இதற்குக் காரணம் என்னவென்று பார்க்கும்போது, ஒன்றுபட்ட அடிப்படையில் ராஜ்யத்தை அமைக்கவேண்டுமென்பதே யாகும். அப்படியில்லாமல், பரந்த ஒரு நாடு ஒரே ராஜ்யமாகத்தான் இயங்கவேண்டுமென்று, அந்த நோக்கத்தோடு இயங்கி வருமானுல், அந்நாடு கண்டிப்பாக பல கஷ்டங்களுக்கு உள்ளாக நேரிடும். என்று திட்டவட்டமாக நாம் சொல்லலாம். ஒரு பரந்த நாட்டை ஒன்றுபட்ட அரசாங்கமாக ஒரே ராஜ்யத்தின்கீழ் கொண்டு வந்தால் நல்லது என்று சொல்லக்கூடியவர்கள் நாட்டின் ஒற்றுமையை சீர்குலைக்க வேண்டுமென்று சொல்லக்கூடியவர்களாகவே இருப்பார்கள் என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நல்ல வேளையாக அந்தக் கொள்கையை உடையவர்கள் நம் நாட்டிலே சிறுபான்மையினராகத்தான், சிறு சக்தியாகத்தான் விளங்கி வருகிருர்கள். இது ஒரு பக்கம். இன்னொரு பக்கம் இதற்குத் தீர்வு காண நாட்டைப் பிரிக்கவேண்டுமென்று சொல்லக்கூடி

13th November 1961] [Sri C. Subramaniam]

யவர்களும் இருக்கிறார்கள். அதாவது மூன்று நான்கு ராஜ்யங்களைச் சேர்த்து ஒரு நாடாக பிரிக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டு வருகிறார்கள். மற்றொரு சாரார், அப்படிக் கூடாது தமிழ் நாடு தனியாக பிரியவேண்டுமென்று சொல்கிறார்கள். எப்படி நாடு முழுவதும் ஒன்றாக ஒரு அரசின்கீழ் இருந்தால், அதனால் நாட்டிலே சீர்குலைவுகள் எல்லாம் ஏற்படுமோ, அது போல் இப்படி தனித்தனியாக பிரிக்கவேண்டுமென்று சொல்லுபவைகளும் காலப் போக்கிலே அழிந்துவிடும்.

10-30 a.m.

அதிருஷ்டவசமாக இந்த சக்திகள் என்னுடைய கருத்திலே குறைவான சக்திகள். ஒரு சிலர் மட்டும் தான் இவ்வாறு பேசுகிறார்கள், இவ்வாறு நினைக்கிறார்கள். எப்படி ஒரே அரசின் கீழ் வருவது முடியாத காரியமோ அதே போல் நாட்டை பிரிப்பது என்பது முடியாத காரியம் என்பதை உறுதியாக சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இந்த இரண்டு சக்திகளுக்கும் மத்தியிலே சமஷ்டி அடிப்படையிலே அந்தந்த பிரதேசங்களுக்கு உரிமைகள் கொடுத்து, அந்தந்த பிரதேசங்கள் வளர்வதற்கு என்ன செய்யவேண்டுமென்ற அடிப்படையில் அதைப்பற்றி ஏதாவது பரிசீலனை செய்யவேண்டுமென்றாலும், மத்திய அரசாங்க அமைப்பில், ராஜ்ய அரசாங்க அமைப்பில் அவைகளுக்குள்ளே உள்ள தொடர்புகளில் காலப்போக்கிலே மாறுதல் ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்று சொன்னாலும், அது பரிசிலிக்கத் தக்க விஷயம். நாட்டின் ஒற்றுமையை சீர்குலைக்கும் முறையிலே ராஜ்யங்களையே எடுத்து விடவேண்டுமென்று சொன்னாலும் சரி, அல்லது நாட்டை பிரிக்கவேண்டுமென்று சொன்னாலும் சரி, அது ஒப்புக்கொள்ளக்கூடியது அல்ல, நாடும் அதை ஒப்புக்கொள்ளாது என்ற கருத்தை வலியுறுத்துகிறேன். இந்த அடிப்படையில் பார்க்கும்பொழுது, இந்தக் கோடிக்கும் அந்தக் கோடிக்கும் மத்தியிலே தீர்வு காணும் பொழுது, சமஷ்டி அடிப்படையிலே ஒன்றுபட்ட இந்தியாவாகத் தான் தொடர்ந்து நடத்திச் செல்ல முடியும்.

அதேமாதிரி தான் மொழிப் பிரச்னையும். ஒரு பக்கம் இந்தி எல்லாவற்றிற்கும் வந்துவிட வேண்டுமென்ற வெறி, இன்னொரு பக்கம் இந்தி இந்தப் பக்கமே வரக்கூடாது என்று எதிர்ப்பு வெறி. இந்த இரண்டுக்கும் மத்தியிலே நம்முடைய மொழி வளரக்கூடிய முறையிலே, உரிமைகள் பாதிக்கப்படாத வகையிலே, உரிமைகள் பாதுகாக்கப்படக்கூடிய முறையிலே நாட்டிற்கு ஒரு பொது மொழியை ஏற்படுத்திக்கொள்ள முடியுமா, உலகத்தில் வேறு இடங்களில் இந்த மாதிரி நடந்திருக்கிறதா என்பதைப் பார்த்து நாம் அந்த முறையில் தீர்வு காணவேண்டும். இதிலும் இரண்டு கோடியிலும் இல்லாமல் மத்தியில் இருந்து சுமுகமான முறையில் தீர்வு காணமுடியும். நிர்வாக மொழியிலே ஏற்பட்டிருக்கக்கூடிய ஒன்றுபட்ட கருத்து. அதேமாதிரி பாட மொழியிலே நாம் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய ஒன்றுபட்ட கருத்து; அதே முறையில் என்னென்ன, மொழி படிக்க வேண்டும் என்பதிலும் எல்லோரும் உட்கார்ந்து பரிசீலனை செய்து மும்மொழிக் கொள்கையை ஒப்புக்கொண்டிருக்கிறோம். மொழிப் பிரச்னையின் காரணமாக நாம் ஒன்றுபட்டு இருக்க முடியாது, அல்லது ஒரு மொழிதான்

[Sri C. Subramaniam] [13th November 1961

எல்லோர் பேரிலும் திணிக்கப்படவேண்டும் என்ற முறையிலே நினைப்பது தவறு. நாடு ஒன்ருக இருக்கக்கூடிய முறையில், எப்படி ராஜ்யங்களை ஏற்படுத்தி, அவைகளில் வளர்ச்சிக்கு ஏற்பாடு செய்திருக்கிறேமோ, அதேபோல வெவ்வேறு மொழிகள் வளர்வ தற்கு வாய்ப்பு கொடுத்து, அந்தந்த மொழிகள் அவைகளுக்குண் டான உரிமைகளை ஆங்காங்கு பெறமுடியும் என்ற முறையில் மொழிப் பிரச்னைக்கு தீர்வு காணமுடியும் என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நாட்டின் ஒற்றுமையை சிதரடிக்காமல், கலவரம், குழப்பம் ஏற்படாமல் அதற்கும் தீர்வு காண முடியும்.

இவ்வாறு பல்வேறு விஷயங்களிலே தீர்வு காணமுடியும் என்று சொல்லும்பொழுது, திட்டத்தின் மூலம் பிரதேச ஏற்றத்தாழ்வு களை நீக்கவேண்டும் என்று நினைக்கிறேம், தனி மனிதர்களுக் குள்ளே இருக்கக்கூடிய ஏற்றத்தாழ்வுகளை நீக்க வேண்டும் என்று எண்ணுகிறேம். ஆனல், இவைகளெல்லாம் உடனடியாக மந்திர சக்தியால் அல்லது மாயா ஜாலத்தால் ஒரே நாளில், ஒரே வருஷத் தில் ஏற்படக்கூடியது அல்ல. தொடர்ந்து திட்டம் போட்டு அந்த லட்சியப்பாதையில் செல்லக்கூடியவர்களாக இருக்கிறேம். இப் பொழுது அதற்கு உடனடியாக எடுக்கக் கூடிய பல நடவடிக்கை களை எடுத்திருக்கிறேம். அதுவும் பல அடிப்படையிலே எடுத்துக் கொண்டிருக்கிறேம். நம்முடைய நாட்டில் தொழில்கள் வளர வேண்டும் அன்னிய நாடுகளை என்றைக்கும் எதிர்பார்த்து இருக்கக் கூடாது, நம்முடைய சக்தியை பெருக்கியாக வேண்டும். அதற்கு வசதியாக இருப்பதற்கு கனரகத் தொழில்கள் ஏற்படுத்தபட வேண்டும் என்று நடவடிக்கை எடுக்கிறேம். ஒரு சில பகுதிகளில் அதிகமாக தொழில் வளர்ச்சி தற்போது ஏற்படுகிறது என்ற காரணத்திற்காக நாட்டை பிரித்துவிடவேண்டும் என்று சொன் ஞல் அதுவும் சரியல்ல. அல்லது பொருளாதார உயர்வுக்கு ராஜ்யங்களைப்பற்றி நாம் கவலைப்படக்கூடாது. எங்கே அதிகமாக பொருள்கள் இருக்கின்றனவோ எங்கே அதிக வசதி இருக்கிறதோ அங்கே தொழில்களை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்கின்ற ஒரு வாதத்தையும் ஒப்புக்கொள்ள முடியாது. இரண் டுக்கும் மத்தியில் ஒரு முடிவு எடுக்கவேண்டியவர்களாக இருக் கிறேம். அந்த அடிப்படையில் முடிவு எடுத்து, நமக்கு வேண்டிய அடிப்படையான தொழில்களை இன்றைக்கு அமைத்துக்கொண்டு வருகிறேம். அதே நேரத்தில் பிராந்தியங்களுக்கிடையே உள்ள ஏற்றத் தாழ்வுகளையும் நாம் நீக்கக்கூடும் என்ற முறை யிலே முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறேம். முன்னேற்றம் அடைந்திருக்கக்கூடிய பகுதிகளையெல்லாம் ஒதுக்கித்தள்ளி விட்டு, நாம் பிரிந்துவரவேண்டும் என்ற ஒரு கருத்து சிலர் சொல் லிக்கொண்டிருப்பது. திராவிட நாடு பிரிந்துவரவேண்டும் என்று எந்த அடிப்படையில் சொல்லுகிறுர்கள் என்ருல், வடக்கு வாழ் கிறது, தெற்கு தேய்கிறது என்ற முறையில், அதாவது வளர்ந்த பகுதியை வெட்டவேண்டும், தேய்ந்த பகுதியை பிரித்து வளர்க்க வேண்டும். அப்படி திராவிட நாடு அமைகிறது என்று வைத்துக்கொண்டாலும், அதற்

குள்ளே தமிழ் நாட்டை பார்க்கும்பொழுது, 4 பகுதி
களுக்குள்ளே தெற்கு பகுதி, தென்கிழக்கு பகுதி மற்ற 3 பகுதிகளை
விட வளர்ந்திருக்கிறது, ஆகவே இதிலிருந்து நாம் கத்தரித்துக்
கொண்டு போய் விடுவோம், தமிழ்நாடு மட்டும் தனியாக இருக்க
லாம் என்று சொல்லும் பிரிவினை மனப்பான்மை ஏற்படலாம்.
அதேமாதிரி கோவை ஜில்லா மற்ற ஜில்லாக்களைவிட அதிகமாக
வளர்ந்திருக்கிறது, ஆகையினாலே கோவை மற்ற பகுதிகளிலிருந்து
பிரிந்துபோக வேண்டும் என்று சொல்லி, இப்படி பிரிவினை மனப்
பான்மை வளர்ந்துகொண்டே போய், கடைசியிலே ஊருக்கு ஊர்
போய், ஆளுக்கு ஆள் வரையில் வந்துசேரும். பிரிவினை என்று
ஏற்பட்டு விட்டால், அது எங்கு போய் நிற்கும் என்று சொல்ல
முடியாது.

திட்ட அடிப்படையில் நம்முடைய நாட்டு வளர்ச்சியை, நம்
முடைய பகுதி வளர்ச்சியை நாம் அடைய முடியுமா, முடியாதா
என்று பார்க்கிறபொழுது, திட்ட அடிப்படையில் அதற்கு தீர்வு
காண முடியும் என்பதை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்
மூலம் நிரூபித்துக் காண்பித்திருக்கிறோம். மூன்றாவது ஐந்தாண்
டுத் திட்டத்தின் மூலம் நிரூபித்துக் காண்பிக்கப் போகிறோம்.
ஒன்றுபட்ட இந்தியாவில், சமஷ்டி அடிப்படையில் திட்ட அடிப்
படையில் பிரதேச ஏற்றத் தாழ்வுகளை நீக்குவதற்கு நாம் காரியங்
களை சாதிக்க முடியும் என்பதை சாதித்துக் காண்பித்திருக்கிறோம்.
வெறும் வாயளவில் பேசாமல், சாதிக்க முடியும் என்பதை செயலில்
நிரூபித்துக் காண்பித்திருக்கிறோம். திட்டத்தை வேண்டாம் என்று
ஒரு சிலர் சொல்லுகிறார்கள். வேறு காரணத்திற்காக அவர்கள்
திட்டம் வேண்டாம் என்று சொல்லுகிறார்கள். யோசித்துப்
பார்ப்போமானால், நாம் திட்ட அடிப்படையில் தான் முன்னேற
முடியும், திட்ட அடிப்படையில் தான் நாட்டினுடைய ஒற்று
மையை உறுதியாக்க முடியும், அந்த முறையில் தான் திட்டம்
நடந்து வருகிறது என்று நான் முதலிலேயே வலியுறுத்திச் சொன்
னேன். அதே மாதிரி தனிப்பட்ட நபர்களிடையே உள்ள ஏற்றத்
தாழ்வு நீக்கப்படவேண்டும் என்ற முறையிலேயும் முயற்சி எடுத்
திருக்கிறோம். ஆனால், அது இப்பொழுது உடனடியாக ஏற்படுவ
தற்கு சாத்தியக்கூறு இல்லாமல் இருக்கிறது. ஏனென்று சொன்
னால், தொழில்களை வைக்கவேண்டும் என்று சொல்லும்பொழுது,
தனியார் துறையை விட்டு, பொதுத் துறையிலே தொழில்களை
அமைப்பதாக வைத்துக்கொண்டாலும், ஒரு சிலருக்கு அதிக
சம்பளம் கொடுக்கவேண்டியதாக இருக்கிறது, மற்றவர்களுக்கு
குறைந்த சம்பளம் கொடுக்கவேண்டியதாக இருக்கிறது. இந்த
ஏற்றத்தாழ்வு உடனடியாக நீக்கக்கூடியது அல்ல. 30, 40 வருஷங்
களாக கம்யூனிஸ பாதையில் சென்றிருக்கக்கூடிய ரஷ்யாவில் கூட
ஏற்றத்தாழ்வு இன்னும் குறையவில்லை. பெரிய அளவில் ஏற்றத்
தாழ்வுகள் இருக்கின்றன. இன்றைக்கு பெரிய பணக்காரர்கள்
என்று சொல்லக்கூடிய ஒரு பகுதியினர்கள் இருக்கிறார்கள்.
சாதாரண சம்பளம் வாங்கக்கூடியவர்கள் பலர் இருக்கிறார்கள்.
அமெரிக்காவை எடுத்துக்கொண்டாலும், இன்றைக்கு கம்யூனிஸப்

[Sri C. Subramaniam] [13th November 1961

பாதையில் செல்லும் நாட்டைவிட அங்கே ஏற்றத் தாழ்வுகள் குறைவாக இருக்கின்றன என்பது புள்ளி விவரங்களிலிருந்து தெரியவரும்.

பொருளாதார வளர்ச்சி அடிப்படையில், தொழில் வளர்ச்சி அடிப்படையில் தானகவே அடித்தளத்தில் இருக்கக்கூடிய மக்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்துதான் ஆகவேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். பெரிய தொழில்கள் ஏற்படுத்தி பெரிய அளவில் உற்பத்தி அதிகரிப்பதற்கு, வளர்ச்சி ஏற்படுவதற்கு முயற்சிகள் எடுத்துக்கொண்டிருக்கிறோம். இன்றைக்கு அமெரிக்காவை எடுத்துக்கொண்டால் வருஷம் ஒன்றுக்கு 65 லட்சம் கார்கள் உற்பத்தி செய்கிறார்கள். 10,000 கார்கள் உற்பத்தி செய்கிறார்கள் என்றால் 10,000 கார்கள் வாங்கக்கூடியவர்கள் இருந்தால் போதும், அந்தத் தொழிலை நடத்த முடியும். ஆனல் வருஷம் ஒன்றுக்கு 65 லட்சம் கார்கள் உற்பத்தி ஆகிறது என்று சொன்னல், அந்த அளவுக்கு வாங்கக்கூடிய சக்தி சமுதாயத்தில் இருந்தால் தான், தொழிலை தொடர்ந்து நடத்த முடியும். தொழில் வளர்ச்சி ஏற்படும்பொழுது, பெரிய அளவில் உற்பத்தி ஏற்படும். அப்பொழுது தொழில் மட்டும் வளர்ந்து பிரயோசனம் இல்லை. வாங்கக்கூடிய சக்தி பெரும்பாலான மக்களிடையே பரவலாக சமுதாயத்தில் ஏற்பட்டால் தான் அந்தத் தொழில் இயங்க முடியும். தொழில் வளர்ச்சி அடைய அடைய ஒரு சிறு பகுதியினர் பெரிய பணக்காரர்களாக ஆகிக்கொண்டிருக்கிறார்கள். பெரும் பகுதியினர் மேலும் மேலும் தரித்திரர்களாக போய்க்கொண்டிருக்கிறார்கள் என்ற மார்கஸீய தத்துவம் இன்றைய தொழில் வளர்ச்சிக்கு உகந்தது அல்ல என்பதை உலக நிகழ்ச்சிகளும், தொழில் வளர்ச்சி ஏற்பட்டிருக்கக்கூடிய நாடுகளும் இன்றைக்கு நமக்கு நிரூபித்துக் காண்பிக்கின்றன.

இன்றைக்கு தொழில் வளர்ச்சி ஏற்படவேண்டும் என்கின்ற முறையிலே தொழில் வளர்வதற்கு ஏற்பாடுகள் செய்து வருகிறோம். தொழில் வளர்ச்சி ஏற்பட ஏற்பட தானக சமுதாயத்திலே உள்ள ஏற்றத்தாழ்வுகள் மாறித் தான் ஆகவேண்டும், அடித்தளத்திலுள்ள மக்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்துதான் ஆகவேண்டும். இன்றைக்கு அம்மாதிரி உயர்ந்து கொண்டு வருகிறது, உயர்ந்திருக்கிறது என்பதை நாம் காண்கிறோம். மக்களுடைய சக்தி, மக்களுடைய அறிவு எந்த அளவுக்கு இருக்கிறதோ, அந்த அளவுக்குத் தான், ஒற்றுமை சக்தியாக இருந்தாலும் சரி, பொருளாதார வளர்ச்சி சக்தியாக இருந்தாலும் சரி, அமையும். அதெல்லாம் அவர்களுடைய அறிவைப் பொருத்திருக்கிறது, வளர்ச்சியைப் பொருத்திருக்கிறது. அதனல் தான் நாம் கல்விக்கு முதல் இடம் கொடுத்திருக்கிறோம். நாட்டின் ஒற்றுமையை இன்றைக்கு உறுதிப்படுத்தும் முறையில் கல்வி முறையும் அமையவேண்டும். ஆகவேதான் இந்த விஷயங்கள் எல்லாம் இந்த மகாநாட்டில் ஆராயப்பட்டு சில யோசனைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. தொடர்ந்து பல்வேறு துறையிலே செயல்பட்டு அந்த ஆலோசனை

**13th November 1961] [Sri C. Subramaniam]**

களையெல்லாம் மேலும் மேலும் பரிசீலனை செய்து நாட்டினுடைய ஒற்றுமையை வளர்ப்பதற்கு நாம் என்னென்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்றும் என்பதைப்பற்றி நாம் இன்றைக்கு முடிவு செய்ய வேண்டியவர்களாக இருக்கிறோம்.

இதிலே, நாட்டின் ஒற்றுமையைப் பற்றிப் பேசும்போது, நாட்டுப் பிரிவினை அடிப்படையில் நினைக்கிறவர்கள் என்ன கருத்துக்களைச் சொல்லமுடியும் என்று சந்தேகம் ஏற்படலாம். நாடு ஒற்றுமையாகத்தான் இருந்து வந்திருக்கிறது; இனி மேலும் ஒற்றுமையாகத்தான் இருக்கப் போகிறது. ஒற்றுமை நீங்கிப் பிரியும் காலத்தில் அவர்கள் யோசனைகளுக்கு இடம் ஒருவேளை இருக்கலாம். ஆனால், இன்றைக்குச் சொல்ல வேண்டியது ஒற்றுமையாக இருக்கும் காலத்தில், ஒற்றுமை அடிப்படையில் நாட்டை எப்படி இன்றைக்கு முன்னேற்றம் அடையச் செய்வது என்பது பற்றித்தான். அதற்கான யோசனைகளைச் சொல்லவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். நாட்டை இன்னும் ஒற்றுமைப் படுத்த என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று சொல்ல வேண்டும். இதிலே பிரிவினையில் நம்பிக்கை இருக்கிறவர்களும் யோசனைகள் கூற இடம் இருக்கிறது என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இன்னொரு கருத்தைப் பற்றியும் தெரிந்து கொள்ள விரும்புவார்கள். இதிலே, நாட்டைப் பிரிக்க வேண்டும் என்று சொல்லும் எங்கள் நிலைமை என்ன என்று கேட்கலாம். அதைப் பற்றியும் இந்த அறிக்கையில் சொல்லப் பட்டிருக்கிறது. இதிலே, என்னுடைய கருத்தில், அதைக் குற்றம் என்று சட்டம் செய்து, அதைக் குற்றமாக்க வேண்டிய அவசியம் இல்லை. இப்பொழுதே அதைக் குற்றம் என்று சட்டம் செய்திருப்பதாகச் சிலர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். என்ன சட்டம் என்று கூட படித்துப் பார்க்காமல், "நாட்டுப் பிரிவினை என்பதே" குற்றம் என்று செய்திருக்கிறார்கள் என்று குறை கூறுகிறார்கள். அப்படி இப்பொழுது சட்டம் ஒன்றும் இல்லை. அப்படிச் சட்டம் செய்ய வேண்டும் என்பதும் எங்கள் கருத்தல்ல. எங்கள் கருத்து, அதைப்பற்றி மக்களே சரிசெய்து கொள்வார்கள் என்பதுதான்; பொருத்திருந்து பார்க்க வேண்டும். அதைப் பற்றி எந்த விதமான சட்ட நடவடிக்கையும் இன்று எடுக்கவில்லை. அதைப் பொது மக்களுக்கு விட்டு விடலாம் என்று விட்டுவிடப் பட்டிருக்கிறது. அந்த சோதனையும் வருகிற பெப்ரவரி மாதத்தில் வர இருக்கிறது. ஆகவே, எல்லாகட்சியாளரும் அவர்கள் தங்கள் யோசனைகளைச் சொல்லத் தயங்க வேண்டியதில்லை என்பதைத் தெரிவித்துக் கொண்டு, இந்த அறிக்கையைச் சபைமுன் விவாதத்திற்கு வைக்கிறேன். இதில் எல்லோரும் பங்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்பது அவசியம் இல்லை என்று நினைக்கிறேன். கட்சித் தலைவர்கள் மட்டும் கலந்துகொண்டு, அவர்கள் யோசனைகள் சொன்னதன் பிற்பாடு—இதற்கு பதில் சொல்லும் விஷயம் அல்ல—இருந்தாலும், ஏதாவது பதில் சொல்ல வேண்டியிருந்தால், எல்லோரும் தங்கள் தங்கள் கருத்துக்களைச் சொன்ன பிறகு, நான் சொல்லுகிறேன்.

[Sri C. Subramaniam] [13th November 1961

இது இன்றைக்கே முடிவு செய்யக்கூடிய காரியம் இல்லே. சொல்லப் படும் பல்வேறு கருத்துக்களேயும் பரிசிலனே செய்து பார்க்க வேண்டிய விஷயம். திடீரென்று முடிவுகள் எடுக்க முடியாது.

நாட்டை ஒற்றுமை உள்ள நாடாக, செழிப்பு வளரும் நாடாக, மக்கள் வளம்பெறும் நாடாக முன்னேற்றப் பாதையில் நடத்திச் செல்ல எல்லோரும் முயற்சிகள் செய்ய வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்திக் கொண்டு, இந்தப் பிரேரணையை சபைமுன் வைக்கிறேன்.

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Paper laid on the table of the House on the 11th November 1961 on 'National Integration' be taken into consideration."

SRI N. K. PALANISAMI : Sir, as this is a very important subject, I request that we may continue the discussion in the afternoon also and if it is not possible to conclude the discussion to-day, we can have the discussion to-morrow also.

DEPUTY SPEAKER : I don't think it is necessary. Anyway, let us see.

SRI K. VINAYAKAM : Sir, I rise on a point of order. I would like to know from the Hon. Finance Minister whether it would be possible under the present constitutional set-up obtaining in the country to vivisect the country into Dravidasthan and so on, by entering the Legislature and working for the same under the Constitution as in force to-day?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** அவர்கள் சொல்லுவார்கள்; நானும் கேட்கத்தான் உட்கார்ந்திருக்கிறேன்.

**SRI V. K. KOTHANDARAMAN :** ஸார், என்பேரில் உள்ள கீழ்க்கண்ட திருத்தங்களேப் பிரேரேபிக்கிறேன்; அவைகளேயும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்:

"(1) மதவாதிகளால் நடத்தப் படும் எல்லா பாடசாலேகளே யும் ஆஸ்பத்திரிகளேயும் சர்க்காரே மேற்கொள்ள வேண்டும்.

(2) கலப்புத் திருமணத்தை ஊக்குவிக்கவேண்டும்"

**SRI N. MARUDACHALAM :** இந்தப் பிரேரணைகளே ஆதரிக்கிறேன்.

DEPUTY SPEAKER : The Motion as well as the amendments are now before the House for discussion. The hon. Member Sri V. K. Ramaswamy Mudaliyar will initiate the discussion. He can take thirty minutes. Then, the hon. Members Sri V. K. Kothandaraman, Sri P. S. Chinnadorai and Sri D. S. Authimoolan may each take twenty minutes and Sri C. N. Annadurai may take thirty minutes. The Hon. Minister may take thirty to forty minutes for his reply.

**SRI V. K. KOTHANDARAMAN :** ஒவ்வொரு அங்கத்தினருக்கும் குறைந்தது அரை மணியாவது கொடுத்தால்தான், இந்த விவாதத்தில் பேசமுடியும் . . . . .

13th November 1961]

DEPUTY SPEAKER : Let the hon. Member Sri Ramaswamy Mudaliyar begin his speech. Then we shall see whether the time allotted for the discussion needs extension

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இப்பொழுது விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கும் "தேசீய ஒருமைப் பாடு" ஒரு முக்கிய மான விவாதம். சுமார் ஒரு மணி நேரமாக கனம் நிதி அமைச்சர் அவர்களால் விவரமாக எடுத்துச் சொல்லப்பட்டது. முக்கியமாக இந்த தேசிய ஒருமைப்பாடு என்பதோடு இன்னும் "இமோஷனல் இன்டக்ரேஷன்" உணர்ச்சியுடன் சேர்ந்திருக்கிறது.

(Sri A. Govindasami in the Chair)

இந்த விஷயத்தை இப்பொழுது விவாதத்திற்கு எடுத்துக் கொள்ள வேண்டிய காரணம் என்ன? சுதந்திரம் பெறுவதற்கு முன்னால், அது வெள்ளையர் ஆட்சிகாலமாக இருந்தாலும் சரி அல்லது அதற்கு முன்பாக இருந்தாலும் சரி, இம்மாதிரியான ஒருமைப்பாடு இல்லையா? அப்படியில்லாவிட்டால், இப்பொழுது மட்டும் ஒருமைப்பாட்டைப்பற்றி பேசவேண்டிய சச்சரவுகளும் பேச்சுக்களும் அகில இந்திய ரீதியிலும் பேசுவதற்கு காரணம் என்ன? இதன் லட்சியத்தைப் பற்றி தெளிவாக இல்லை. இது என்ன திடீரென்று ஏற்பட்டு விட்டதா? அல்லது சமீப காலத்தில் சில விஷயங்கள் காரணமாக பிரிவினை மனப்பான்மை ஏற்பட்டதா என்று யோசித்துப் பார்க்க வேண்டும். என்னைப் பொறுத்த மட்டில் ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஏதாவது பிரிவினை மனப்பான்மை சில வருஷகாலமாக வளர்ந்து வருகிறது என்றால், அதற்கு ஆளும் கட்சியில் இருந்து வந்திருக்கும் காங்கிரஸ் சர்க்கார் செய்து வந்திருக்கும் சில காரியங்களால்தான் ஏற்பட்டது. கனம் கல்வி அமைச்சர் இப்பொழுது செய்த பிரசங்கத்தில், மொழிவாரிப் பிரிவினை செய்ததுதான் காரணம் என்று சொன்னார்கள். உண்மைதான். இன்றைக்கு சென்னையை எடுத்துக் கொண்டால், முன்பு அது சென்னை, ஆந்திரம், கேரளாவில் மலபார் மாவட்டம் முதலியவை சேர்ந்ததாக இருந்தது. அப்பொழுதும் நாம் ஒற்றுமையாக வாழவில்லையா? அம்மாதிரி இருக்கும் போது, இப்பொழுது திடீரென்று இந்தமாதிரி வருவதற்குக் காரணம் என்ன? நான் பல இடங்களில் கேள்விப் படுகிறேன், சில அரசியல் நிபுணர்கள் கருத்து என்னவென்றால், மாகாணங்களை மொழிவாரியாகப் பிரித்ததுதான் இம்மாதிரியான "ஸெபரேடிஸ்ட் டென்டன்ஸி" வளர்ந்ததற்குக் காரணம் என்று. இதிலே கல்வி மிகவும் முக்கியமானது. அந்தக் கல்வி சம்பந்தமாக, அரசியல் சட்டத்தில் என்ன சொல்லப் பட்டிருக்கிறது?

"Article 29 (1). Any section of the citizens residing in the territory of India or any part thereof havnig a distinct language, script or culture of its own shall have the right to conserve the same."

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [13th November 1961

அப்படி இருக்கிறது. அப்படி இருக்கும் போது, சில பிராந்தியங்களில், மைனரிடிகளாக இருப்பவர்களுக்கு போதுமான வசதிகள் செய்து கொடுக்கப்படவில்லை. அவர்களுக்கு வேண்டிய கல்வி வசதிகள் செய்து தரப்படவில்லை. ஒன்று சொல்ல முடியும். என்னைப் பொருத்த மட்டில், நான் செங்கல்பட்டு மாவட்டத்தில் ஜில்லா போர்டு தலைவராக இருந்த போது ஆந்திராவிலிருந்து இன்றைக்கு நம் மாநிலத்தோடு சேர்ந்திருக்கும் அநேக கிராமங்களில், அநேகம் பேர்கள் தமிழர்களாக இருந்தார்கள். அப்பொழுது ஜில்லா போர்டு தலைவர்களாக இருந்தவர்கள், சித்தூரிலும், நெல்லூரிலும், அந்த மக்கள் தமிழ் பயிலுவதற்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுக்க வில்லை, தமிழ் உபாத்தியாயர்கள் இல்லை.

இந்தமாதிரியான பிரச்னைகள் வந்ததன் காரணமாகத்தான் எங்கு பார்த்தாலும் கிளர்ச்சிகள் ஏற்பட்டன. அதன் காரணமாகத்தான் பிரியவேண்டுமென்ற மனப்பான்மை வளர்ந்து வந்தது. முக்கியமாக, அகில இந்திய ரீதியிலே இப்பொழுது பார்த்தால், இந்தியை எப்படியாவது திணிக்கவேண்டுமென்று சமீப காலமாக ஒரு முயற்சி இருந்து வருகிறது. அதை எதிர்த்து தென்னகத்திலும், வங்காளத்திலும் கிளர்ச்சி ஏற்பட்டது. அதே மாதிரி அஸ்ஸாம் பிராந்தியத்திலும் கிளர்ச்சி ஏற்பட்டது. எப்படியாவது அகில இந்திய ரீதியிலே இந்தியை ஆட்சி மொழியாகத் திணிக்க வேண்டுமென்ற முயற்சி தென்னகத்திலே இருக்கிற மக்களிடையே பீதியை உண்டுபண்ணியிருக்கிறது. இப்படியே போய்க்கொண்டிருந்தால் என்ன ஆகுமோ என்று நினைக்கவேண்டியிருக்கிறது. அதுவும் ஒரு முக்கிய காரணமாக எனக்குத் தோன்றுகிறது. இந்தி திணிக்கப்படவில்லை என்று இப்பொழுது சொல்ல முடியாது. கல்வித் துறையை எடுத்துக்கொண்டால் நமது சர்க்காரின் கொள்கை என்னவென்று பார்த்தால், ஆங்கில மொழி படிக்க வேண்டும், ஒரு பிராந்திய மொழி படிக்கவேண்டும், "Anyone of the other Indian languages" என்று போட்டிருந்தாலும்கூட, இந்தி தவிர வேறு எந்த மொழியையும் அந்தப் பிரிவின்கீழ் படிக்க முடியாது. "வேறு ஏதாவது இந்திய மொழி" என்று சொன்னால், வங்காளம் கற்றுக்கொள்ள முடியுமா அல்லது மகாராஷ்டிரம் கற்றுக்கொள்ள முடியுமா? இதை "indirect imposition of Hindi" என்றுதான் சொல்ல வேண்டும். நேரடியாக இந்தியைப் படிக்கவேண்டுமென்று சர்க்கார் சொல்லாமல் இருந்தபோதிலும், இம்மாதிரியான பீதி மக்களிடத்திலே பரவலாக ஏற்பட்டிருக்கிறது. கல்வி வளர்ச்சி அவசியம்தான். மக்களிடையே கல்வி அறிவு எவ்வளவு சீக்கிரமாகப் பரவவேண்டுமோ, அவ்வளவு சீக்கிரம் பரவவேண்டும். அதற்காக நமது மாகாண சர்க்கார் ஏராளமான பணம் செலவழித்து, எங்கு பார்த்தாலும் பள்ளிகளைத் துவங்கியிருக்கிறார்கள். சுமார் 26,000 ஆரம்பப் பள்ளிகள் ஆரம்பிக்கப்பட்டு இப்பொழுது நடைமுறையில் செயல்பட்டு வருகின்றன. அகில இந்திய ரீதியிலே பார்த்தால், 1951-ல் படித்தவர்களின் எண்ணிக்கை ஜனத்தொகையில் 16.6 சதவிகிதமாக இருந்தது. 1961-ஐ எடுத்துக் கொண்டாலும், இன்னும் கிட்டத்

13th November 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

தட்ட 76 சதவிகிதம் கல்வி அறிவில்லாமல் இருக்கிறுர்கள் என்று தெரிய வருகிறது. நமது கல்வி அமைச்சர் அவர்கள், 1961-ம் வருஷ சென்ஸஸ் கணக்குப்படி, படித்தவர்களின் எண்ணிக்கை 30 சத விகிதம் என்று சொல்லுகிறுர்கள். அந்தக் கணக்குப்படி பார்த்தாலும், கல்வி வளர்ச்சி இன்னும் பரவலாக ஏற்படவில்லை என்றுதான் தோன்றுகிறது. மலபாரிலே படித்தவர் எண்ணிக்கை அதிகமாக இருக்கலாம். அதிலேயும் "ரீஜனல் டிஸ்பாரிட்டி" இருந்துகொண்டிருக்கிறது. அரசியல் சட்டத்திலே, 1950-ம் வருஷத்திலிருந்து 10 வருஷங்களுக்குள் 14-வயதுக்கு உட்பட்டவர்களுக்கு கட்டாயக் கல்வி, இலவசக் கல்வி அளிக்கப்படவேண்டுமென்று போடப்பட்டிருந்தும், அந்தத் திட்டம் இன்னும் நடைபெறவில்லை. நான் நம்முடைய மாகாணத்தைப் பற்றிப் பேசவில்லை. அகில இந்திய ரீதியில்தான் பேசுகிறேன். எங்கு பார்த்தாலும் கனரகத் தொழில்கள், மற்றும் சாதாரணத் தொழில்கள் எல்லாம் முன்னேற்றம் அடைவதற்கு வேண்டிய வழிகள் செய்தோமே தவிர, கல்வி வளர்ச்சியை விருத்தி செய்வதற்குப் போதுமான நடவடிக்கை எடுக்காததன் காரணமாகத் தான் இந்த மாதிரிக் கோளாறுகள் வருகின்றன. கல்வியின்மை, ஏழ்மைத்தனம், அறிவு இல்லாமை இவைகள்தான் இந்தமாதிரிக் கிளர்ச்சிகளுக்கு அடிப்படைக் காரணங்கள். அதோடு, சமீபத்தில் தேவநாகரி லிபியை "அடாப்ட்" செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டு வருகிறது. இதுவும் கிளர்ச்சிக்கு ஒரு காரணமாகும். நமது கல்வி அமைச்சர் இவர்கள் சமீபத்திலே ஒரு இடத்திலே பேசியிருக்கிறுர்கள், ஸ்டேட் லெவலிலே ஆங்கிலம் இருக்க வேண்டும், ஜில்லாக்கள் லெவலிலே பிராந்திய மொழி இருக்கவேண்டும், அகில இந்திய ரீதியிலே இந்தியும், ஆங்கிலமும் இருக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறுர்கள். உப ஜனுதிபதியாகிய டாக்டர் ராதா கிருஷ்ணன் அவர்கள், இந்தி அகில இந்திய ரீதியிலே நேஷனல் மொழியாக இருந்த போதிலும், ஆங்கிலமும் தொடர்ந்து இருக்க வேண்டுமென்ற அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறுர்கள். எது எப்படியிருந்த போதிலும் தேவநாகரி ஸ்கிரிப்ட்டை கண்டிப்பாகத் திணிக்கப் போகிறுர்கள். இதைப் பற்றி நமது பிரதம மந்திரி அவர்கள் தென்னகத்திற்கு வந்திருந்தபோது பேசியிருக்கிறுர்கள். வடக்கேயுள்ளவர்கள் நாங்கள் தென் பிராந்திய மொழியாகிய தமிழைக் கற்றுக்கொள்ளப்போகிறேம் என்று பேச்சளவில் சொல்லுகிறுர்களேயொழிய இது நடைமுறையில் சாத்தியமா என்பதைப் பற்றி நன்கு சிந்தித்துப் பார்க்கவேண்டும். தேவநாகரி லிபியைப் புகுத்துவது பற்றி நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்காருக்கு என்ன எழுதியிருக்கிறுர்கள், என்ன செய்யப் போகிறுர்கள் என்பதைப் பற்றி நம்முடைய அமைச்சர் அவர்களின் பதிலில் திட்டவட்டமாகச் சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

லிங்விஸ்டிக் மைனுரிட்டிகளின் நலன்கள் இதன் காரணமாக வெல்லாம் பாதிக்கப்பட்டுள்ளன என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். வடநாட்டிலிருந்து வரும் உத்தரவுகளுக்கு நம்

முடைய பிராந்தியத்தில் என்னவிதமான மனப்பான்மை இருக்கிறது, பின்னிட்டு அவைகள் எந்த விபரீத விளைவுகளுக்குக் கொண்டுபோய்விடும் என்பதையெல்லாம் ஆராய்ந்து பார்த்து, நமது சர்க்கார் மத்திய சர்க்காருடன் பேசி திட்டவட்டமான நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நமது தமிழ் மக்கள் எல்லோருமே ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில், ஆங்கிலம் தொடர்ந்து இருக்க வேண்டும். நம்முடைய பிராந்திய மொழியாகிய தமிழ் நம்முடைய தமிழ் நாட்டிலே இருக்கவேண்டும், அதற்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். ஆங்கிலத்தை நாம் கைவிட முடியாது. எவ்வளவு காலம் ஆங்கிலம் தொடர்ந்து நீடிக்க வேண்டுமென்பதைப் பற்றி வருங்கால சந்ததியார்கள் தான் நிர்ணயிக்க முடியுமே தவிர, நாம் ஒன்றும் சொல்ல முடியாது. ஆனால் தமிழுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். அதுதான் என்னுடைய அபிப்பிராயம். இதைப் பற்றியும் சர்க்கார் திட்டவட்டமாக நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

நமது அமைச்சர் அவர்கள் அஸ்ஸாம் (Assam) மாகாணத்தைப் பற்றிச் சொன்னார்கள். ஜபல்பூர் கலவரத்தைப் பற்றிச் சொன்னார்கள். முக்கியமாக, அஸ்ஸாமை எடுத்துக்கொண்டால், வங்காளிகள் இவ்விடம் சரிவர நடத்தப்படாததன் காரணமாகத்தான் இந்த மாதிரிக் கோளாறுகள் ஏற்பட்டன. அவைகளை எல்லாம் சமாளித்துவிட்டதாகச் சொல்லலாம். இதற்கு அரசியல் சட்டத்தைத் திருத்தவோ, ரெப்பிரசென்டேஷன் ஆப் பீப்பிள் ஆக்டைத் திருத்தவோ அல்லது இந்தியன் பீனல் கோடைத் திருத்தவோ முயற்சித்தால் போதாது. இந்த முறையில் ராஜ்ய சர்க்கார்களும், மத்திய சர்க்கார்களும் நடப்பார்களேயானால், ஒரு பெரிய தவறைச் செய்வார்கள் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். அம்மாதிரி நடவடிக்கைகளைக் கைவிடவேண்டும்.

11-00 a.m. ஆனால், அதைப்பற்றி இன்னும் முடிவாக ஏதும் நடவடிக்கை எடுக்கவில்லை என்று அமைச்சர் அவர்கள் ஆரம்ப உரையில் சொன்னார்கள். அதை நாம் சற்றுச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். முக்கியமாக திராவிட முன்னேற்றக் கழகத்தினர்கள் நினைப்பதற்கு ஒரு இடம் இருக்கிறது. எல்லோரும் சஞ்சலப்படவேண்டியவர்களாக இருக்கிறார்கள். நாங்களும் அம்மாதிரி நினைத்தோம். இம்மாதிரி சட்டங்களைத் தேர்தலுக்கு முன்னால் திருத்தியமைப்பதென்றால் ஏதோ ஒரு தனிப்பட்ட பார்ட்டிக்காகவோ வேறு எதற்காகவோ செய்வதாகத்தான் அர்த்தமாகும். நல்ல எண்ணத்துடன் சர்க்கார் செய்தபோதிலும் இம்மாதிரி எண்ணுவதற்கு இடம் கொடுக்கக்கூடாது என்பதுதான் என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். நான் அரசாங்கத்தைப் பொறுத்தமட்டில் தான் சொல்கிறேன். இதை நான் துணிந்து சொல்ல விரும்புகிறேன். இம்மாதிரி நடவடிக்கை சட்டத்தைத் திருத்துவது—ஒரு பார்ட்டியையோ மற்றொரு பார்ட்டியையோ, லிங்விஸ்டிக் மைனாரிடியையோ பாதிக்கக்கூடியதாக இருந்தாலும், அகில

13th November 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

இந்திய ரீதியில் எல்லாப் பார்ட்டிகளையும் வரவழைத்து, அவர்களுடைய அபிப்பிராயங்களையும் கேட்டு, தேர்தலுக்குப் பின்னிட்டு மாற்றியமைக்கலாம். எல்லா மாகாணங்களும் ஒத்துழைத்து நல்லபடியாக ஆட்சியை நடத்த வேண்டுமானுல், தேர்தலுக்குப் பிறகுதான் இவைகளையெல்லாம் வைத்துக்கொள்ள வேண்டுமே தவிர, தேர்தலுக்கு முன்பாக இம்மாதிரியான சட்டங்களைக் கொண்டுவருவது அவ்வளவு உசிதம் அல்ல என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். இம்மாதிரி மேலும் மேலும் சட்டத்தைத் திருத்தி போலீசுக்கு அதிகாரம் கொடுப்பதன் காரணமாக ஒரு போலீஸ் ராஜ்யம்தான் வருமேயொழிய நல்லபடியாக அமைதியான சர்க்கார் வராது என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

காங்கிரஸ் எலெக்ஷன் மானிபெஸ்டோ, தேசிய ஒற்றுமை (நாஷனல் இன்டெக்ரேஷன்) பற்றியெல்லாம் ஆலோசிப்பதற்கு ஸ்ரீமதி இந்திரா காந்தியின் தலைமையில் குழு அமைத்தார்கள். பார்ப்பவர்களுக்கு என்ன தெரிகிறது என்ருல், காங்கிரஸ் கட்சி மட்டுந்தான் தேசிய ஒற்றுமைக்காகப் பாடுபடுவதாகவும் மற்றக் கட்சிகளெல்லாம் எதிலும் அக்கறை கொள்ளாதது போலவும் தெரிகிறது. தேசிய ஒற்றுமைக்காக ஒத்துழைக்க எல்லாக் கட்சிகளுக்கும் ஒரு வாய்ப்பு இருக்கிறது. தேசம் நன்ருக இருக்க வேண்டும், ஒற்றுமையுடன் இருக்கவேண்டும், எல்லாப் பிராந்தியங்களும், எல்லா ஜாதியார்களும், எல்லா வகுப்பார்களும் ஒற்றுமையாக நல் வாழ்க்கை நடத்தவேண்டும், எல்லா மாநிலங்களும் பொருளாதாரத் துறையில் முன்னேறவேண்டும், அதற்கு எல்லோரும் பாடுபடவேண்டும் என்பதை எல்லாக் கட்சியினரும் ஒத்துக் கொள்கிருர்கள். அம்மாதிரி இல்லை என்று ஒருவரும் சொல்ல முடியாது. அதையும் ஆளுங் கட்சியில் உள்ளவர்களும் அமைச்சர்களும் மனதில் கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

'இந்தியன் பீனல் கோட்' திருத்தத்தைப்பற்றி சில கட்சிகள் பொது மேடைகளில் பிரசங்கம் செய்து சில அபிப்பிராயங்களை எடுத்துச்சொல்லும்போது அரசாங்கம் திடீரென்று 144-வது செக்ஷன்படி தடை உத்தரவு போட்டு நிறுத்துவதன் காரணமாகத்தான் அநேக கட்சிகளுக்கு மனக் கொதிப்பு ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் விஸ்தாரமாகப் பேசுவதற்கு வாய்ப்பு கொடுத்திருக்கவேண்டும். பேசியதில் குறை இருந்தால், குற்றம் இருந்தால், தலைவர்களை வரவழைத்து அடிக்கடி பேசவேண்டும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

அடுத்தபடியாக, தொழில் வளர்ச்சியிலே பிராந்தியத்திற்குப் பிராந்தியம் வேற்றுமை இருக்கிறது என்றெல்லாம் சொல்லப்படுகிறது. அதைப்பற்றி நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் கூட, நேற்றையதினம் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றிப் பேசுகிறபோது, குறிப்பிட்டார்கள். நம்முடைய மாநிலம் சில வருஷங்களாக ஐம்பது சத விகிதத்திற்கு மேலே தொழில் வளர்ச்சி பெற்றிருக்கிறது என்றெல்லாம் புள்ளி விவரங்கள் கொடுத்தார்கள்.

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [13th November 1961

உண்மை. ஆனால், சமீபத்தில் நான் சில சட்டசபை அங்கத்தினர்களுடன் வடக்கே சென்று அங்குள்ள சில தொழிற்சாலைகளைப் பார்த்தேன். அங்கே பார்த்ததில், அனேகமாக மகாராஷ்டிரம், வங்காளம், உத்தரப் பிரதேசம் இப்படிப்பட்ட அனேக இடங்களில் கன ரகத் தொழில்களைப் போன்று முக்கியமான துறைகளில் பெரிய அளவுக்குத் தொழில் அபிவிருத்தி அடைந்திருப்பதைப் பார்த்தேன். அதை ஒருவருமே மறுக்க முடியாது. அவர்கள் அபிவிருத்தி அடையக்கூடாது என்று நினைக்கக் கூடியவர்களில் நான் ஒருவன் அல்ல. இருந்தாலும், முக்கியமாக தென்னகத்தை எடுத்துக்கொண்டால், இங்கே தொழில் வளர்ச்சி ஏற்படுவதற்கு இன்னும் அனேக இடையூறுகள் இருக்கின்றன என்பதைத்தான் நாம் பார்க்கிறோம்.

போக்குவரத்துச் சாதனங்களைப் பொறுத்தவரையில் நாம் இன்னும் போதுமான அளவு முன்னேற்றம் அடையவில்லை. போதுமான ரயில் பாதைகள் அமைக்கப்படவில்லை. துறைமுகங்கள் அபிவிருத்தியைப் பொறுத்தும் இங்கு அதிக நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படவில்லை. இப்படியெல்லாம் 'ட்ரான்ஸ்போர்ட் பாட்டல்நெக்' இருப்பதால்தான், நாம் அனேக துறைகளிலே தொழில் அபிவிருத்தி அடைய முடியவில்லை. விவசாயத் துறையிலே கணிசமான அளவுக்கு உணவு உற்பத்தி செய்து இருந்த போதிலும் நம்முடைய பிராந்தியத்தைப் பொறுத்த வரையில் சுய நிறைவு (ஸெல்ப்-ஸபிஷியன்ஸி) அடையவில்லை. இவைகளையெல்லாம் சற்று யோசிக்கவேண்டும்.

நம்முடைய சர்க்காரின் முயற்சியினாலும், தனியார் துறையினரின் முயற்சியினாலும் நாம் ஓரளவு முன்னேறியிருந்தபோதிலும், அகில இந்திய ரீதியில் நமக்குக் கொடுக்கப்பட வேண்டிய பொருளுதவி மற்றும் சகாயங்கள் யூனியன் சர்க்காரால் கொடுக்கப்படவில்லை என்பதை யாரும் மறுக்க முடியாது. அதனால் மற்றப் பிராந்தியங்களுக்குக் கொடுக்கவேண்டியதில்லை என்று நான் சொல்லத் தயாராயில்லை. ஆனால், நமக்கு வேண்டிய பொருளுதவி, இன்னும் சகாயங்கள் எல்லாம் வேண்டிய அளவுக்கு அவர்கள் செய்து கொடுக்கவில்லை. அப்படிக் கொடுத்தால்தான் இந்த மனப்பான்மை மாறும். திராவிட நாடு பிரியவேண்டுமென்று சில பேர் சொல்வார்கள். எது எப்படியிருந்தாலும், இம்மாதிரி மனப்பான்மை மாறுவதற்கு வேண்டிய வழி முறைகளை மத்திய சர்க்கார் செய்து, இந்த மனப்பான்மையை மாற்றுவதற்கு அவர்கள் ஆவன செய்யவேண்டும். இதைப்பற்றி ஏதோ சில கட்சி பேசுகின்றார்கள் என்று பேசுவதில் பிரயோஜனம் இல்லை. நம்முடைய கல்வி அமைச்சர் அவர்கள் அடுத்தபடியாக மத்திய சர்க்காருக்குப் போக இருக்கிறார். ஆனால், என்னைப் பொறுத்தவரையில் கொஞ்சம் கஷ்டம்தான், அவர்கள் நம்மைவிட்டு அங்கு போகிறாரே என்பதற்காக. ஆனால், மத்திய சர்க்காருக்குப் போனதும் அவர்கள் அங்கிருந்து நமது ராஜ்யத்திற்கு இன்னும் சலுகைகளை வாங்கிக் கொடுக்க முடியும் என்கிற மகிழ்ச்சி ஏற்படுகிறது. எது எப்படி

13th November 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

யிருந்தாலும், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திற்குள் இம் மாதிரியான உணர்ச்சி, மனப்பான்மை மாற்றப்படவேண்டுமானல், மத்திய சர்க்காருடன் நம்முடைய சர்க்கார் வாதித்து, எவ்வளவு பொருளுதவிகள் நமக்குக் கிடைக்கவேண்டுமோ அதைப் பெற முயற்சிக்கவேண்டும். முக்கியமாக ரயில் பாதைகள் அமைப்பது, மின்சார அபிவிருத்தி செய்வது, நீர்ப்பாசன வசதி செய்துகொடுப் பது, 'இன்டர்-ஸ்டேட்ஸ் டிஸ்பாரிடி' யைப் போக்குவது இப்படிப் பட்ட துறைகளில் செய்யவேண்டிய வழிவகைகளைச் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் வேற்றுமை மனப்பான்மை நீங்கி ஒற்றுமை வளரும் என்பதைத் திட்டவட்டமாகச் சொல்ல விரும்பு கிறேன்.

இதற்கெல்லாம் காரணம் " Act of omission and commission on the part of present Government" என்றுதான் நான் சொல்வேன். ஜாதி வேற்றுமை போகவேண்டுமென்று எல்லோரும் சொல்கிருர்களே யொழிய எங்கு பார்த்தாலும் ஜாதி வெறிதான் தலை விரித்தாடுகிறது. தேர்தல் வரப்போகிறது; முக்கியமாக, ஆளுங் கட்சியை எடுத்துக்கொண்டால், தேர்தலுக்கு அபேட்சகர் களைப் போடும்போது கூட ஜாதி மனப்பான்மை காட்டப்படுகிறது. எல்லாக் கட்சிகளிலும் ஓரளவுக்கு இருக்கிறது என்ருலும் ஆளும் கட்சியைப் பொறுத்த வரையில் இந்த உணர்ச்சி அதிகமாக இருக் கிறது. ஒரு வட்டாரத்தில் எத்தனை பேர் ஒரு குறிப்பிட்ட இனத் தவர்கள் இருக்கிருர்கள் என்று பார்த்து, வேறு இனத்தவர்களை அங்கு போட்டால் அவர்கள் ஜெயிக்க முடியாது என்ற மனப் பான்மையில் தேர்தலுக்கு அபேட்சகர்களை எடுக்கிருர்கள். அந்த முறையில்தான் 'ஸெலக்ஷன் ஆப் காண்டிடேட்ஸ்' இருக்கிறதே யொழிய வேறு விதமான மனப்பான்மை இல்லை. ஆக, ஜாதி மனப்பான்மை வளர்ந்துகொண்டே போகிறது. அதைப் பார்க்கும் போது நாம் ரொம்பவும் சிந்திக்கவேண்டியவர்களாக இருக்கிருேம். ஆகவே இதைப் போக்குவதற்கு முக்கியமாக வழிவகை செய்ய வேண்டும். இதைத்தடுப்பதற்கு அரசியல் கட்சிகள் எல்லாம் ஒத்துழைக்கவேண்டும். அதிகாரபூர்வமாக மற்ற மாநில சர்க்கார் களும், மத்திய சர்க்கார்களும் ஒன்று சேர்ந்து இந்த நிலையைக் களைந்து ஒற்றுமை ஏற்படுவதற்கும், ரீஜனல் டெஸ்பாரிட்டியை ஒழிப்பதற்கும் பாடுபடவேண்டும். கல்வித்துறையில் பல முன் னேற்றங்களைக் காண்பதற்கும் முயற்சி செய்யவேண்டும். இப்படி பலவகையிலும் பாடுபட்டு தேசீய ஐக்கியத்தை, ஒருமைப்பாட்டை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : சார், தேசீய ஐக்கியம் மிக மிகப் பிரதானமானது. அந்த தேசீய ஐக்கியத்தை கம்யூனிஸ்டுக் கட்சி சார்பிலே எப்போதுமே வரவேற்கிருேம். இன்றைக்கும் கம்யூனிஸ்டுகள் அதை வரவேற்கின்ருர்கள். அதற்குக் காரணம் பல்வேறு பகுதியைச் சேர்ந்த மக்கள் இருக்கக் கூடிய நமது நாட்டிலே தேசீய ஐக்கியத்தைப் பலப்படுத்துவதன் மூலமாகத் தான் பரஸ்பரம் நன்மை அடையக்கூடிய சூழ்நிலையை உண்டாக்க

[Sri V. K. Kothandaraman] [13th November 1961

முடியும். பொருளாதாரத்துறையிலும், அரசியல் துறையிலுமே நாம் முன்னேற முடியும். அப்படிப்பட்டதொரு ஐக்கியம் ஏற்பட வில்லையென்றால், பொருளாதாரத்துறையில் பின்தங்கிப் போய்விடுவோம். அரசியல் துறையிலும் பலவிதத்தில் சிக்கல்களும், குழப்பங்களும் உண்டாகிவிடும். ஒரு ராஜ்யத்தில் உணவுப்பொருள்களோ, மற்ற பொருள்களோ அதிகமாக உற்பத்தியாகலாம். மற்றொரு ராஜ்யத்தில் குறைவாக இருக்கலாம். தேசிய ஒற்றுமை நிலவியது என்றால் இருக்கிற ராஜ்யம் இல்லாத ராஜ்யத்திற்குக் கொடுத்து உதவி செய்ய முடியும். ஆனால் இன்றையதினம் எல்லா ராஜ்யங்களுக்குமிடையே ஒரு சுமுகமான உறவு உண்டாவதற்குத் தடையாக இருப்பது என்ன என்பதையும் நாம் இந்த நேரத்தில் சிந்திக்கவேண்டிய நிலைமையில் இருக்கிறோம். பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் இந்த தேசத்தை 200 ஆண்டுகாலம் அடக்கி ஆண்டது. அவர்களுடைய ஆட்சியை எதிர்த்து அன்றையதினம் நாம் போராடினோம். சுதந்திரப் போராட்ட காலத்தில் தமிழர்கள், தெலுங்கர்கள், மராட்டியர்கள், வடநாட்டவர்கள், தென்னாட்டவர்கள் என்கிற பாகுபாடு எதுவும் இன்றி ஒன்றுசேர்ந்து போராடினோம் அப்படி ஒன்றுசேர்ந்து போராடும்படியாக நம்மிடத்தில் தேசீய ஒற்றுமை எதனால் வந்தது? ஆங்கிலம் பொதுமொழியாக ஏற்பட்டதனால் என்று சிலர் சொல்லக்கூடும். ஆங்கிலம் தெரியாதவர்கள் பலர் சுதந்திரப்போராட்டத்தில் ஈடுபட்டிருந்தார்கள். பிராந்திய அடிப்படையிலே தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி, ஆந்திர காங்கிரஸ் கமிட்டி என்பதைப் போலத்தான் ஸ்தாபனங்களை அமைத்துக்கொண்டு அவரவர்கள் மொழியிலேயே அன்றையதினம் பேசி, மக்களிடத்தில் சுதந்திர தாகத்தை உண்டாக்கி, தேசிய ஒருமைப்பாட்டை அடிப்படையாகக்கொண்டு விடுதலை அடைந்தோம். அன்றையதினம் ஜனகனமன என்ற வங்காளிப் பாட்டை யாகட்டும், வந்தே மாதரம் என்ற தமிழ் கீதத்தை யாகட்டும் எல்லோரும் ஒரே குரலில்தான் சொன்னார்கள். மகாத்மா காந்திக்கு ஜே, ஜவஹர்லால் நேருவுக்கு ஜே என்று ஜே போட்ட மக்கள் அவர்கள் எந்த சாதியைச் சேர்ந்தவர்கள் என்று அன்றையதினம் பார்க்கவில்லை. விடுதலை அடைந்த பிற்பாடு மொழி அடிப்படையில் ராஜ்யங்களைப் பிரித்தார்கள். மொழி அடிப்படையில் ராஜ்யங்களைப் பிரித்தாலும்கூட எந்த எந்த வகையில் எல்லா ராஜ்யங்களுக்கும் இடையே ஒரு ஒற்றுமை எல்லாக் காலத்திலும் இருக்கும்படியாகச் செய்யமுடியும் என்பதை நாம் சிந்தித்தேயாகவேண்டும். ஆனால் இன்றுவரை ஆளும் கட்சியினராகட்டும், அவர்களுடைய சர்க்காராகட்டும் மொழிப்பகை, சாதிப்பகை உண்டாகும்படியாக, தேசிய ஒற்றுமை குலையும்படியாகத்தான் காரியங்களைச் செய்துவந்திருக்கிறார்கள். அந்தத் தவறுகளை எதிர்க்கட்சிக்காரர்கள் சுட்டிக்காட்டினால் அவர்களிடம் கோபம் அடைவதும், அவர்களுடைய மனச்சாட்சியே அவை தவறு என்று சுட்டிக்காட்டும்போதுகூட அதை மறைத்துப் பேசுவதும்தான் இதுவரை அவர்களுடைய வழக்கமாக இருந்திருக்கிறது. என்றைக்குமே அவர்கள் தேசிய ஒற்றுமைக்கு உலை வைக்கும் முறையில் அவர்களுடைய கட்சிக்கு என்றால்

13th November 1961] [Sri V. K. Kothandaraman]

ஒருவிதம், மாற்றுக் கட்சிகளுக்கு என்றால் ஒருவிதம் என்று தான் நடந்து வந்திருக்கிறார்கள். இந்த நிலையில் தேசிய ஒருமைப்பாடு வரவேண்டும் வரவேண்டும் என்று சொன்னால் அது எவ்வாறு சாத்தியம் என்று பார்க்கவேண்டும். இன்னும் சொல்லப்போனால் ஒரு பிராந்தியத்திற்கும், இன்னொரு பிராந்தியத்திற்கும், காட்டப்படுகிற வேறுபாடு, தொழில் வளர்ச்சிக்கான திட்ட வேறுபாடு நிச்சயமாக அங்கங்கே பிளவைத்தான் உண்டாக்கும். இன்றைக்கு ஒரு குடும்பத்தை எடுத்துப் பார்த்தாலே போதும். ஐந்து பேர்கள் அண்ணன் தம்பி இருக்கிறார்கள் என்று சொன்னால் சம அடிப்படையில்தான் அவர்களிடத்தில் சொத்து பிரிவினை செய்யப்படவேண்டும். இல்லாவிட்டால் வெட்டு குத்து தான் ஏற்படுகிறது என்பதைப் பார்க்கிறோம். அதேபோன்று, தகப்பனார் தன்னுடைய சொத்தை தன் குழந்தைகளுக்கு சமமாகப் பிரித்துக் கொடுக்கவில்லையென்றால், அந்தத் தகப்பனாருக்கு எதிராக குழந்தைகள் சண்டைபோடுவதைப் பார்க்கிறோம்.

அதைத்தான், பஞ்சபாண்டவர்களுக்கும் துரியோதனாதியருக்கும் நடந்த யுத்தம் கூடக் காட்டுகின்றது. பொருளாதார அடிப்படையிலே பங்கு கொடுக்காத காரணத்தினால்தான் அந்த யுத்தம் எல்லாம் நடந்தது. ராஜ்ய அடிப்படையில் மட்டும் அல்லாமல் போகப் போக எங்களுடைய ஜில்லாவில் தொழில் வளர்ச்சி இல்லை, எங்களுடைய தாலுகாவில் தொழில் வளர்ச்சி இல்லை, கோயம்புத்தூர், மதுரை, திருச்சி போன்ற ஜில்லாக்களில் மட்டுந்தான் தொழில் வளர்ச்சி இருக்கிறது என்று ஜனங்களுடைய மனோபாவம் வளரக்கூடிய அளவுக்கு இன்றைய நிலைமை வளர்ந்திருக்கிறது. சென்னையில்தான் திறமை படைத்தவர்கள் இருக்கிறார்கள், தொழிலாளர்கள் மதுரையில்தான் இருக்கிறார்கள், தொழில் அதிபர்கள் கோயம்புத்தூரில்தான் இருக்கிறார்கள், என்று கனம் நிதியமைச்சர் அவர்கள் கூறலாம். ஆனால் இன்றையதினம் வகுப்புவாதமும், ஜாதி வெறியுமே தொழில் வளர்ச்சி சம்பந்தப்பட்டவரை வளர்ந்து வருகின்றது என்பதை கனம் நிதியமைச்சர் அவர்கள் நன்றாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இது போன்ற நிலைமை இருக்கின்ற காரணத்தால்தான் சில முக்கியமான தொழில்களை அரசாங்கமே ஏற்று நடத்த வேண்டுமென்று சொல்கிறோம். வெற்றிலை பாக்குக் கடை முதற்கொண்டு அணு சக்தி நிலையம் வரை அரசாங்கமே நடத்த வேண்டுமென்று சொல்லவில்லை. சோவியத் ரஷ்யாவில் வெற்றிலை பாக்குக் கடையிலும் அரசாங்கமே ஒரு ஆளை வைத்துச் சம்பளம் கொடுத்து நடத்தப் படுவதைக் கேட்டுப் பெருமைப்படுகிறேன். அதற்குக் காரணம் அங்கே அவ்வளவு நம்பிக்கை இருக்கிறது. இங்கு நம்பிக்கை ஏற்படவில்லை. இந்த நாட்டிலே, ஒரு நாயுடு மில்லை வைத்தால் நாயுடுகளாகவே அங்கு வேலைக்கு அமர்த்துகிறார். முதலியார் ஆரம்பித்தால் முதலியார்களாகவே வேலைக்கு அமர்த்துகிறார்கள். இந்த நிலைமை இருக்கிற காரணத்தால் மைனாரிடி மக்கள், தாழ்த்தப்பட்ட மக்கள் தங்களுக்கு, இத்தனை சதவிகிதம் அந்தத் தொழிற்சாலைகளில் வேலை கிடைக்க வழி செய்ய வேண்டு

[Sri V. K. Kothandaraman] [13th November 1961

மென்று கேட்கிருர்கள். இதற்காக ஏன் ஒரு சட்டம் கொண்டு வரக் கூடாது என்று நாங்கள் மட்டுமல்ல, ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களும் கேட்கிருர்கள். ஆகவே இது போன்று ஜாதி வெறியை வளர்க்கும் போக்கில் தனியார் துறைத் தொழில்கள் இருக்கும் காரணத்தால் அரசாங்கமே முக்கியமான தொழில்களை யெல்லாம் ஏற்று நடத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதுமட்டுமல்லாமல் இன்றையதினம் தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் இடையே நியாயமான போராட்டம் ஏற்படக் கூடிய காலத்திலே கூட, அந்த இடத்திலே ஜாதி வெறியையும், மத வெறியையும் உண்டாக்கக் கூடிய அளவுக்கு, அந்த முதலாளிகள் சூழ்நிலையை ஏற்படுத்துகிருர்கள் என்பதையும் நாம் மறந்து விடக்கூடாது.

மொழி சம்பந்தப்பட்டவரை பார்த்தால் இன்றைக்குத் தேவ நாகரி லிபியைத் திணிக்க முயற்சிக்கிருர்களேயொழிய மொழி ஒற்றுமையை உண்டாக்கக்கூடிய நிலைமையை உண்டாக்க வில்லையே! சம அந்தஸ்து கொடுக்கும் தன்மையிலே போதுமான கவனம் செலுத்தப்படவில்லை என்பதைத்தான் இந்த நேரத்தில் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த மொழிப் பிரச்னை யில் குழப்பங்கள் இருக்கிற காரணத்தால் சுதந்திரத்திற்குப் பிறகு ஆந்திரத்திலே, மைசூர் ராஜ்யத்திலே, இன்னும் பல ராஜ்யங் களிலே ஒருவருக்கொருவர் சச்சரவுகளும் குழப்பங்களும் ஏற்படு வதைப் பார்க்கிறோம். ஆந்திராவில் ரெட்டியார்களா, கம்மாளர் களா என்று சண்டை போடுகிருர்கள். இந்த நிலைமை மாற மொழி அந்தஸ்திலும், தொழில் வளர்ச்சி அடிப்படையிலும் சம அந்தஸ்து கொடுக்கக் கூடிய தன்மையிலே கவனம் செலுத்தப்படவேண்டு மென்று இந்த நேரத்திலே நான் கேட்டுக் கொள்ள விரும்புகிறேன். இந்த மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிலும் இந்தப் பிரச்னைகளைத் தீர்க்கக் கூடிய அளவுக்குக் கவனம் செலுத்தப்படவில்லை. இந்த முறையில் சம அந்தஸ்து கொடுக்கப்பட்டால், எனது மதிப்பிற் குரிய திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த மெம்பர்கள் கூட பிரிவினை கோஷத்தை எழுப்ப மாட்டார்கள் என்று நம்பு கிறேன். பிரிவினை கோஷத்தை மேலும் வலியுறுத்தக் கூடிய தன்மையை, அதற்கு ஒரு சக்தி ஏற்படக் கூடிய வகையில், அந்தச் சக்தியை ஊட்டக் கூடியவர்கள் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் தான். இதற்காக ஒரு மகாநாட்டை, பார்லிமெண்டில் இருக்கும் பல்வேறு கட்சித் தலைவர்களுக்கும் அழைப்பு அனுப்பி நடத்தினுர் கள். அதற்கு, திருவாங்கூர் ராஜ்யம் தனியாகத்தான் இருக்க வேண்டுமென்று வாதிட்ட சர் சி. பி. ராமசாமி அய்யர் போன்றவர் களுக்கெல்லாம் அழைப்பு அனுப்பப்பட்டது. ஒரு கட்சி அடிப் படையில் பார்லிமெண்டில் இருக்கக் கூடிய திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும், தமிழ் தேசியக் கட்சியைச் சேர்ந்தவர்களுக்கும் அழைப்பு அனுப்பியிருந்தால் குடியா முழுகிவிடும்? அந்த விவா தத்தில் அவர்களும் பங்கெடுத்துக் கொள்ளுவதன் மூலமாக ஒருவருக்கொருவர் விஷயங்களைப் புரிந்து கொள்ளுவதற்கு உதவி கரமாக இருந்திருக்கலாம். அவர்கள் சொல்வதில் நல்ல கருத்துக் கள் இருந்தால் மற்றவர்கள் எடுத்துக் கொள்ளலாம். மற்றவர்கள்

13th November 1961] [Sri V. K. Kothandaraman]

சொல்வதிலே கருத்துக்கள் இருந்தால் அவர்களும் எடுத்துக் கொள்ளத் தயாராக இருப்பார்கள். அவர்களை இந்த மகாநாட்டுக்குக் கூப்பிடாதது துரதிருஷ்டவசமானது என்பதுதான் என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். மதுரையில், நேரு அவர்கள் பிரிவினை கோஷத்தைக் கண்டு சீறி விழுவதும் உள்நாட்டுக்கலகம் ஏற்பட்டாலும் சமாளிப்போம் என்று சொல்வதும், உடனே நம்முடைய மதிப்புக்குரிய அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள், இதை நாங்களே அடக்கி விடுவோம் என்று சொல்வதும் எதைக் காட்டுகிறது? இந்தச் சிக்கலான பிரச்னை பற்றித் திர்க்கமாகப் பரிசிலனை செய்து முடிவெடுப்பதில் கவனம் செலுத்துவதற்குப் பதிலாக, ஒரு யுத்தம் என்ற நிலைமைக்கு வருவது அவ்வளவு சரியானதல்ல. (கனம் ஸ்ரீ. சி. சுப்பிரமணியம் சைனா பற்றிச் சொல்லுங்கள்). எல்லாவற்றைப் பற்றியும் சொல்கிறேன். இன்றைக்கு வகுப்பு வாதம் ஜாதி, மத, இன அடிப்படையிலே வளர்ந்து வருகிறது என்று சொன்னால் அதற்குக் காரணம் ஆளும் கட்சியினர்தான். உதாரணமாக, கேரளத்திலே ஒரு அரசியல் கட்சியைக் கவிழ்ப்பதற்காக, பிற்போக்கு சக்திகளுடன், முஸ்லிம் லீகுடன் ஒன்றுபட்டதன் விளைவை, இந்த ஒரு வருஷ காலத்திலேயே பார்க்கிறோம். மத அடிப்படையிலே கலகங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்று சொன்னால் அதற்குப் பொறுப்பாளிகள் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்று திட்டவட்டமாகச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அன்றைக்கு நாங்கள் எடுத்துக் கூறினோம் என்று சொன்னால், அதை ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லாத நிலைமையில்தான் அதனுடைய பலனைக் கூட இன்றைக்கு அனுபவிக்கும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதைப் பார்க்கிறோம். அன்றைய தினம் வெள்ளையன் தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநாட்ட எப்படியெல்லாம் ஜாதி வெறி, இன வெறி, மத வெறி இவைகளைத் தூண்டிவிட்டார்களோ, கலகத்தை உண்டாக்கிக்கொண்டு இருந்தார்களோ, அதேமாதிரித்தான் இன்றைய தினம் காங்கிரஸ் கட்சி தன்னுடைய ஆதிக்கத்தை நிலை நாட்ட பல ரூபத்தில் தூண்டிவிடக்கூடிய நிலைமையில் இருக்கிறது என்று நான் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இதை நன்றாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஒரே கட்சியிலே கூட பொருளாதார அடிப்படையிலே, உத்தியோக அடிப்படையிலே, 1937-ம் ஆண்டிலே எடுத்துக்கொண்டால் நமது மதிப்புக்குரிய ராஜகோபாலாச்சாரி அவர்கள் முதல் மந்திரியாக இருந்த காலத்தில் இது போன்ற குறைபாடுகள் இருந்தன. ஆந்திராவுக்கு சம அந்தஸ்து கொடுக்கப்படவில்லை என்று ஆந்திராவிற்கு அவர் சென்றபோது கருப்புக்கொடி காட்டப்பட்டது. கருப்புக்கொடி காட்டப்பட்டது என்றால் சாதாரண தொண்டர்கள் இதைக் காட்டவில்லை. பெரும் தலைவர் பட்டாபி சீதாராமையா அவர்கள் தலைமையில் கருப்புக்கொடி காட்டப்பட்டது என்று சொன்னால் இது எதைக் காட்டுகிறது. ஆகவே சுதந்திரம் அடைந்த பிறகு நாம் பார்க்கிறோம் பல ராஜ்யங்களிலே ஒரே கட்சியில் பல குழப்பங்கள்—பல தகராறுகள்—எற்படக்கூடிய அளவில் நிலைமை இருக்கிறது என்பதைப் பார்க்கிறோம். ஆகவே . . .

11–30 a.m.

[13th November 1961

TEMPORARY CHAIRMAN (SRI A. GOVINDASAMY): அங்கத்தினருக்கு அதிகமாகவே 5 நிமிஷம் ஒதுக்கப்பட்டது—அதுவும் முடிந்து விட்டது.

SRI V. K. KOTHANDARAMAN: ஆகவே, இந்தத் தீர்மானத்திலே குறிப்பாக பல தீர்மானங்கள் போடப்பட்டிருக்கின்றன. இதில் குறிப்பாக 22-வது பாராவில் 6-வதாக Political power, at any level, should not be used for furthering the personal interests of members of one's own party or to harm the interests of members of other parties என்று இருக்கிறது. ஆனல் இது போல் ஆளும் கட்சி நடந்து கொண்டது உண்டா என்பதுதான் எனது கேள்வி. பொதுக் கூட்டங்களை எடுத்துக்கொண்டாலும், ஊர்வலம் நடத்துவதை எடுத்துக் கொண்டாலும் பல விதங்களில் பாகுபாடுகள் செய்யப்படுகின்றன. காங்கிரஸ் மாநாடு அல்லது எக்ஸிபிஷன் நடக்கும் போது சர்க்கார் மூலமாக பல விதத்தில் பொருளாதாரங்களை உண்டாக்கக் கூடிய தன்மையில் எப்படியெல்லாம் வந்திருக்கின்றன என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அதே போன்று போலீஸ்காரர்கள் மூலமாக மற்றவர்களுக்கு ஒரு விதம், ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களுக்கு ஒருவிதம்—இப்படி நடக்கிறது. உதாரணத்திற்கு ஒன்று சொல்லவேண்டுமென்றல் ஒரு ராஜ்யத்தின் முதன் மந்திரியாக இருந்த திரு. ஈ. எம். எஸ். நம்பூதிரிபாத் அவர்கள் வேலூருக்கு வந்த காலத்தில் அங்கே அன்றைய தினம் ஒரு காங்கிரஸ் கூட்டம் இருந்தது என்ற காரணத்தினல், ஏக காலத்தில் 2-3 கூட்டங்கள் நடக்கக் கூடாது ஒரு டவுனில் என்று, அன்றைய தினம் காங்கிரஸ் கூட்டம் நடக்கப் போகிறது, ஆகையால் வேறு எந்தக் கூட்டமும் நடக்கக்கூடாது என்று மறுக்கும் அளவுக்கு நிலைமை ஏற்பட்டது என்பதைப் பார்க்கிறோம். இதே போன்று எத்தனையோ உதாரணங்களைக் கொடுக்க முடியும். இன்றையதினம் அரசியல் போராட்டத்தில் ஈடுபட்டதற்காக விவசாயத் தொண்டர்களை ஜெயிலில் அடைத்து சரியான உணவு கொடுக்காமல், கல்லும் மண்ணும் கலந்த உணவைக் கொடுத்து, வீரப்பன் என்ற தொண்டர் வழக்குப் போட்டார் என்று அவரை அடித்திருக்கிறார்கள். அதோடு இல்லாமல் தொண்டர்களை தெரியாது செய்து விட்டோம், இனிமேல் அந்த மாதிரி செய்ய மாட்டோம் என்று கவர்னருக்கு மன்னிப்புக் கடிதம் எழுதி வாங்கும் அளவுக்கு நிலைமை இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆகவே, தேசீய ஐக்கியம் ஏற்படவேண்டுமானல் என்னுடைய அபிப்பிராயம் மொழிகளுடைய வளர்ச்சிக்கு சம அந்தஸ்து கொடுக்கவேண்டும், தொழில் வளர்ச்சிக்கு சம அந்தஸ்து கொடுக்க வேண்டும்.

TEMPORARY CHAIRMAN (SRI A. GOVINDASAMY): கனம் அங்கத்தினருக்குக் கொடுத்த நேரத்திற்கு மேல் ஆகிவிட்டது.

SRI V. K. KOTHANDARAMAN: ஜாதி வெறி, இன வெறி, மத வெறி இவைகளை வளர்க்காமல் சகல துறைகளிலும் கவனம் செலுத்தவேண்டும். மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வழங்க

13th November 1961] [Sri V. K. Kothandaraman]

வேண்டும். மத அடிப்படையில் இயங்கக் கூடிய பாடசாலைகளையும் ஆஸ்பத்திரிகளையும் சர்க்கார் எடுத்துக்கொள்ளவேண்டும். மாண வர்களுக்கான புத்தகங்களை சர்க்காரே தயாரிக்க வேண்டும் . . . .

TEMPORARY CHAIRMAN (SRI A. GOVINDASAMY): அடுத்து ஸ்ரீ பி. எஸ். சின்னதுரை அவர்கள் பேசலாம்.

**SRI P. S. CHINNADURAI:** மதிப்பிற்குரிய சபைத் தலைவர் அவர்களே, எனக்கு குறைந்தது அரை மணி நேரம் அனுமதிப்பீர் கள் என்று நான் நினைக்கிறேன். ஏனென்றால் அதிக அவகாசம் இருக்கிறது, கனம் நிதி அமைச்சரும் தனக்கு பதிலளிப்பதற்கு அரை மணி நேரம் போதும் என்று சொல்லி விட்டார்கள்.

தேசிய ஒற்றுமையை வலியுறுத்துவதற்காக இன்றைக்கு நாம் இங்கே கூடியிருக்கிறோம். இந்த நேரத்திலே நிறைந்த பொறுப்பு ஆளும் கட்சியைச் சேர்ந்ததாக இருக்கிறது என்று நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இந்தத் தீர்மானத்தை சபை விவாதிக்கும் போது கலந்துகொள்ளவேண்டுமென்ற ஒரே காரணத்திற்காக நான் கோயம்புத்தூரிலிருந்து இன்றைக்கு இங்கே வந்திருக்கிறேன். ரயிலடியிலிருந்து விடுதிக்குப் போய் குளிக்காமல் கூட நேராக இங்கே வந்து சபைக்குள் அமர்ந்திருக்கிறேன். இரண்டு அங்கத் தினர்கள்தான் பிரஜா-சோஷலிஸ்ட் கட்சியில் இருந்தாலும் அந்த இரண்டு பேர்களும் நூற்றுக்கு நூறு பிரசன்னமாக இருக்கிறோம். ஆனால் ஆளும் கட்சியில்—அடிக்கடி கனம் நிதி அமைச்சர் அவர்கள் தம்முடைய எண்ணிக்கையைக் குறித்து மிகவும் பெருமையோடு சொல்லிக்கொள்வார்கள், அவர்களை நான் கேட்க விரும்புகிறேன்—தேசிய ஒற்றுமையைக் குறித்த இந்த மிகவும் முக்கியமான தீர் மானத்தை நிறைவேற்றும் இந்த நேரத்தில், இந்தத் தீர்மானத்தை விவாதிக்கும் இந்த நேரத்தில், உங்களுடைய அந்த மதிப்புக்குரிய எண்ணிக்கை எங்கே போயிருக்கிறது என்று நான் அறிய விரும்பு கிறேன். இந்தத் தீர்மானத்தை வலியுறுத்துவதிலும், இதனைக் குறித்து பிரிவினைதான் வேண்டும் என்று தங்கள் வாதத்தை எடுத்து உரைக்கும் தருணத்திலும் அப்படிப்பட்ட விவரங்களை பூர்ணமாக அறிந்துகொள்ள, அதிலே தங்களுடைய கருத்துக்களை உருவாக்கிக்கொள்ள ஆளும் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் அத்தனை பேரும் கூடியிருப்பது ஒன்றுதான் சரியானதாக இருந் திருக்கும். இப்படிப்பட்ட பலவீனமான நிலையில் 15 ஆண்டு காலத்திற்கு முன் காங்கிரஸ்தான் பாகிஸ்தான் ஏற்பட அனுமதித் தது. காங்கோவில் இன்றைக்கு நாம் என்ன பார்க்கிறோம். கடாங்கா என்ற பகுதி பிரிந்து போக நினைக்கிறது. அங்கே இது வரையில் ஆட்சி புரிந்த பெல்ஜியம் பிரிந்து போகிறவர்களுக்கு துணை புரிய மறைமுகமாக பல விதமான சதிகள் புரிந்துகொண் டிருக்கின்றன. அப்படி காங்கோவிலிருந்து ஒரு பகுதி பிரிந்து போவது தவறு என்று நாம் நினைக்கிறோம்—உலகத்திலிருக்கின்ற ஜனநாயக நாடுகள் நினைக்கின்றன. அப்படி பிரிந்து போகக் கூடாது, அந்தப் பகுதியைச் சேர்த்தே காங்கோவில் வைத்திருக்க வேண்டும் என்று நம் நாட்டிலிருந்து சிறந்த துருப்புக்களை

[Sri P. S. Chinnadurai] [13th November 1961

அனுப்பியிருக்கிறோம் — அங்கே சண்டையிடுகிறார்கள் — அதிலே சிலர் மடிகிறார்கள்—நமது துருப்புக்களிலே. இந்திய மக்களுடைய ரத்தம் காங்கோவிலே சிந்தப்படுகிறது பிரிவினையை எதிர்த்து. நாம் என்ன செய்தோம்—15 ஆண்டுகளுக்கு முன்னால்? ரத்தம் சிந்த பயந்து பிரிவினைக்கு ஒப்புக்கொண்டோம். தடுக்க முடிந்ததா ரத்தம் சிந்துவதை? பிரிவினை ஏற்பட வேண்டியதன் காரணமாக வேண்டுமானால் ரத்தம் சிந்தாமல் இருந்திருக்கலாம்—ஆனால், ரத்தம் சிந்துவதைத் தவிர்க்க முடிந்ததா? பிரிவினையை எதிர்த்து சிந்தக் கூடிய ரத்தத்தைக் காட்டிலும் அதிக ரத்தத்தை இந்திய மக்கள் இந்தியாவின் பகுதியிலும் சரி, பாகிஸ்தான் பகுதியிலும் சரி சிந்தினார்கள். அதற்கு பதிலாக பாகிஸ்தான் பிரிய வழி யில்லாமல் உறுதியாக இன்றைய ஆளும் கட்சியும் அன்றைய மக்க ளின் பொது ஸ்தாபனமாக இருந்த காங்கிரஸும் வைராக்கியத்து டன் நின்றிருந்தால், இந்த நாடு பிரிவினையாகி இரண்டு நாடுகளாக ஏற்பட்டதைத் தடுத்திருக்க முடியும்.

அன்றைக்கு அதிலே கவனம் செலுத்தவில்லை. உடனடியாகப் பலனை விரும்பினார்கள். சுதந்திரம் கிடைப்பதற்கு சுருக்கு வழியை நாடியதன் விளைவாக பாகிஸ்தான் பிரிந்தது. இன்றைக்கு ஜனாதிபதியாக இருக்கின்ற ராஜன் பாபு அவர்கள் "பிரிக்கப் படாத இந்தியா" என்பது குறித்து மிகப் பெரிய புத்தகம் ஒன்று எழுதி யிருக்கிறார்கள். அப்போது இந்தியா என்னவாக இருந் தது? இப்போது என்னவாக இருக்கிறது? யார் அந்தப் புத்த கத்தை எழுதினாரோ, அவரே பிரிக்கப்பட்ட இந்தியாவின் முதல் ஜனாதிபதியாக இருக்கின்ற நிலைமையைத்தான் உண்டாக்கி இருக் கின்றது. இது மிகச் சிறந்த படிப்பினையாகும் என்பதை இந்த நேரத்திலே சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதற்குப் பிறகு இனி நாட்டை எந்த வகையிலே பிரிக்காமல் ஒற்றுமையோடு வைத்துக்கொள்வது என்பதுபற்றி காங்கிரஸ் இப்போதாவது 15 ஆண்டுகள் கழித்து, ஓரளவுக்கு இந்த நினைப்பு வந்ததற்கு நான் மகிழ்ச்சி தெரிவிக்க வேண்டும். இந்த 15 ஆண்டு காலத்திற்குப் பிறகு இன்றைக்கு நாட்டிலே பல்வேறு பகுதிகளிலே மொழி வெறி சிக்கல்கள் உண்டாகியிருப்பதற்கு யார் காரணம்? இதற்கு காங் கிரஸ்காரர்கள்தான் என்பதை நான் மிகப் பணிவோடு சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். மொழிவாரி ராஜ்யம் அமைப்பது என்பதுதான் காங்கிரசின் முன் நாளைய கொள்கையாக இருந்தது. அதனால் அப்போது மக்களுக்கு இவர்கள் மொழிவாரி உணர்ச்சியை ஊட்டி, அந்த அடிப்படையிலே நாடு பிரிய வேண்டுமென்று மக்களுடைய கருத்திலே படும்படியாக அன்றைக்குச் செய்தவர் கள் காங்கிரஸ்காரர்கள்தான். ஆனால் இன்றைக்கு சுதந்திரம் ஏற்பட்ட பிறகு, அந்தமாதிரியான கருத்துகளுக்கு இடமளிக்க மாட்டோம் என்று மறுத்தார்கள். இதற்கு காரணம் என்ன என்று தெரியாது மக்கள் விழித்தார்கள். ஆனால், அன்றைக்கு மொழிவாரி அடிப்படையில் நாடு பிரிய வேண்டுமென்று கிளர்ச்சி செய்ததின் விளைவு என்ன? மக்கள் மனதிலே நன்றாக இந்த உணர்ச்சி பரவி, கிளர்ச்சியைத் துவக்கினர். ஆகவே, இந்த

13th November 1961] [Sri P. S. Chinnadurai]

வகையிலே மக்களுடைய கவனத்தை ஒருங்கு சேர்த்து, நாட்டிலே மொழிவாரி கிளர்ச்சிகள் ஏற்படும்படிச் செய்தவர்கள் காங்கிரஸ்காரர்கள் என்பதை நான் மறுபடியும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பொட்டி ஸ்ரீராமுலு உயிர் துறந்ததற்குப் பிறகுதான், ஆந்திர ராஜ்யம் ஏற்பட்டது. ஏன் அப்படி ஏற்பட்டது என்பதை நாம் நன்றாக சிந்தித்துப் பார்க்க வேண்டும், நினைத்துப் பார்க்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். அதேபோல் தமிழ் நாடு என்பதற்கும் ஒரு கிளர்ச்சி நடந்தது. இந்த கிளர்ச்சிக்கு கடைசியாக சம்மதம் தெரிவிக்கப்பட்டது. ஆனால் இதற்கு முன்னரே சம்மதம் கொடுத்திருப்பார்களேயானால், திரு சங்கரலிங்க நாடார் இறந்திருக்க வேண்டிய அவசியமேற்பட்டிருக்காது. அதேபோல், மகாராஷ்டிராவை எடுத்துக் கொள்ளுங்கள். மகாராஷ்டிரமும், குஜராத்தும் ஒருபோதும் பிரிக்க முடியாது என்று நமது பாரதப் பிரதமர் உறுதியாகத் தெரிவித்தார். ஆனால் அதன் முடிவு என்னவாயிற்று? அதே மகாராஷ்டிரத்தையும், குஜராத்தையும் பிரித்து வைத்து, அதைத் தானே சென்று அங்கூரார்ப்பணம் செய்துவிட்டு வரவேண்டிய முறையில்தான் நாட்டின் விதி அமைந்திருந்தது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். விதிகளிலே எனக்கு நம்பிக்கை இல்லாவிட்டாலும், நாட்டிலே நடந்துள்ள சம்பவங்களைப் பற்றி எல்லோருடைய கவனத்திற்குக் கொண்டு வர வேண்டுமென்பதற்காகக் கூறுகிறேன். மகாராஷ்டிரத்தையும் குஜராத்தையும் அன்றையத் தினமே பிரிவினை செய்திருப்பார்களானால் மிகவும் நன்றாக இருந்திருக்கும். அதை விட்டுவிட்டு, அவர்கள் கேட்டு, அதன்பின் ஒன்றிரண்டு ஆண்டுகள் கழித்து, பொதுத் தேர்தலை முன்னிட்டு அல்லது வேறு காரணத்திற்காக கொடுக்க வேண்டிய அவசியமேற்பட்டிருக்காது. நூற்றுக்கணக்கானவர்கள் இறந்திருக்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டிருக்காது. பல நூற்றுக்கணக்கானவர்கள் பலவித கஷ்ட நஷ்டங்களுக்கும் ஆளாகி இருக்க வேண்டியதில்லை. இதனையெல்லாம் நன்றாக இப்போது நினைத்துப் பார்க்க வேண்டும். அதேபோல்தான் தமிழ்நாடு கிளர்ச்சி. இப்படி ஒவ்வொன்றையும் நினைத்துப் பார்த்தால், மொழிவாரிக் கிளர்ச்சியின் மூலம் மக்களுடைய கவனம் பூராவுமாக அதிகமான அளவிலே ஈடுபடுத்தக்கூடிய நிலையை ஏற்படுத்தியவர்கள் உண்மையாக காங்கிரஸ்காரர்களே என்பது தெரிய வரும். ஆகவே, இந்தக் கிளர்ச்சிகளுக்கு முதல் முதலில் வழி வகுத்தவர்களே இவர்கள்தான். இதை யாரும் மறுக்க முடியாது. ஆனால் இன்றைக்கு நாம் என்ன பார்க்கிறோம். தேசிய ஒற்றுமைக்காக வழிகாண வேண்டுமென்று நம்மிடையே சொல்லப்படுகிறது. நாடெங்கும் தேசிய ஒற்றுமை குறித்து பேசுகின்ற அதே நேரத்திலே, தேர்தலுக்கு மாத்திரம் ஜாதியின் அடிப்படையிலே, நிற்பதற்குத்தான் நாம் பார்க்கிறோம். தேர்தலிலே யார் யார் எந்தெந்தத் தொகுதிகளில் நிற்பது என்று முடிவு செய்வதற்கு முன்னால், எந்தத் தொகுதியிலே எந்த ஜாதியினர் அதிகமாக இருக்கிறார்கள், யாரைப் போட்டால் ஜெயிப்பார்கள் என்பதிலேதான் அதிகமான கவனம் செலுத்தப்படுகிறது. ஆனால் ஜாதியைப் பற்றி பேசக்கூடாது, நினைக்கக்கூடாது என்று மட்டும் நாம்

எல்லோரும் பேசிக் கொண்டு வருகிறோம். தேசிய ஒற்றுமை பற்றி பேசிக்கொண்டே, அதே நேரத்திலே ஜாதியின் பேராலே தேர்தல் நடப்பதைத்தான் நாம் பார்க்கின்றோம். இதனை வளர்க்கக் கூடாது என்றுதான் நான் இந்த நேரத்திலே சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நான் இதிலே நம்பிக்கை உடையவன். இதற்கு முன் மாதிரியாகக்கூட, கனம் நிதி அமைச்சர் அவர்கள் விளங்கு வதற்கு முடியும். நாட்டுப் பிரிவினை பற்றிய எண்ணமானது சென்னையிலே தான் பெருமளவுக்கு வலியுறுத்தப்பட்டு வருகிறது. இதையே தேர்தல் பிரச்னையாக வைத்து, சென்னை மாகாணத்திலே திராவிட முன்னேற்றக் கழகத்தினர் தேர்தலிலே போட்டியிட இருக்கின்றனர். இதை அவர்கள் சொல்லிக் கொண்டும் வருகிறார் கள். ஒரு பக்கத்திலே திராவிட முன்னேற்றக் கழகத்தினர் நாட்டைப் பிரித்தாக வேண்டுமென்று சொல்கிறார்கள். இதுதான் அவர்கள் கொள்கை என்பது வெளிப்படை. மற்றொரு பக்கத்திலே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் இதற்கு நாங்கள் விட மாட்டோம் என்று சொல்கிறார்கள். இந்தச் சமயத்திலே என் கட்சியின் சார் பாக கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கு ஒன்றை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இதையே ஒரு பிரச்னையாக வைத்து சென்னை நகரத்திலே தேர்தலுக்கு நில்லுங்கள், சட்டசபைக்கு நின்றாலும் சரி, அல்லது பார்லிமெண்டுக்கு நின்றாலும் சரி, உண்மையாகவே பிரஜா சோஷியலிஸ்டு கட்சியானது தனது முழு ஒத்துழைப்பையும் கொடுக்கத் தயாராக இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த கொள்கையை அடிப்படையாக வைத்து, இந்த ஒன்றை மாத்திரம் பிரச்னையாக வைத்து தேர்தலுக்கு நின்றால் பிரஜா சோஷியலிஸ்டு கட்சி தன் ஒத்துழைப்பை நிச்சயமாக கொடுக்கத் தயாராக இருக்கிறது. ஆனால், நான் இங்கு நிற்க மாட்டேன், பொள்ளாச்சியில் தான் நிற்பேன், அதற்கு ஆதரவு கொடு என்று சொன்னால் அப்போது முடியாது. காரணம் என்ன? அங்கே அந்தப் பிரச்னைக்கு முக்கியத்துவம் இல்லை. அங்கே ஜாதிக்குத் தான் முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. என் இதை ஒரு குறிப்பாகச் சொல்கிறேன் என்றால், இதைப் போல் மற்ற இடங்களிலேயும்கூட, எல்லாக் கட்சிக்காரர்களும், இந்த ஜாதி அடிப்படையிலே அபேட்சகர்களை அந்தந்தத் தொகுதிக்கு நிறுத்தும் முயற்சியைத் தவிர்க்க வேண்டுமென்பதற்காகவே தான். ஆகவே, தேர்தலிலே இந்த ஜாதிக்கு முதலிடம் கொடுக்க வேண்டா மென்று வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து மிக முக்கியமான ஒரு விஷயத்தை இந்தச் சபையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். தேசிய ஒற்றுமை ஒற்றுமை வேண்டுமென்று பேசுகின்றோம்.

**Sri M. R. Kandaswami Mudaliyar**: On a point of information, Sir: இந்த ஒற்றுமையானது ஒரு கட்சிக்கு மட்டுமா? எல்லாக் கட்சிகளும் இம்மாதிரி செய்ய வேண்டாமா? அதற்குத் தயாரா? என்று கேட்க விரும்புகிறேன்.

**Temporary Chairman (Sri A. Govindasamy)**: கனம் அங்கத்தினர் ஸ்ரீ சின்னதுரை அவர்கள் தொடர்ந்து பேசலாம்.

13th November 1961]

**SRI P. S. CHINNADURAI :** தேர்தலிலே அப்படி இருக்க வேண்டுமென்று சொல்லும்போது, அது ஒரு கட்சிக்கு மட்டும் என்று அர்த்தமல்ல. எல்லாக் கட்சிகளுக்கும் தான். என்னுடைய கட்சிக்கும் தான் உண்டு என்று நான் சொல்லிக்கொள்கிறேன். ஏற்கனவே நின்ற தொகுதியிலே தான் நான் மீண்டும் தேர்தலுக்கு நிற்கப் போகின்றேன். என்றாலும், ஜாதி அடிப்படையை வைத்துப் பார்க்கும்போது, என்னுடைய ஜாதியினர் அந்தத் தொகுதியில் ஒரு சதமானத்திற்கும் குறைவாகவே இருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆகவே, அந்தச் சந்தேகம் தங்களுக்கு வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன்.

மிக முக்கியமான தேசீய ஒற்றுமை குறித்து நாம் பேசுகின்ற நேரத்திலே, ஒன்றிலே நாம் கவனம் செலுத்த வேண்டும். நம் நாட்டிலே இன்றைக்கு மத ரீதியாக மைனாரிட்டியாக இருக்கக் கூடிய முஸ்லீம்களையும், கிறிஸ்துவர்களையும் நாம் புறக்கணித்து விட்டு, தேசீய ஒற்றுமையை கொண்டு வரவேண்டுமென்று நினைத்தால், அதிலே ஒருபோதும் நாம் வெற்றி பெற முடியாது என்று மட்டும் நான் எச்சரிக்க விரும்புகிறேன். நம்முடைய ராஜ்யத்திலே என்ன நடந்திருக்கிறது? முஸ்லீம்களே கிடையாதா? தவிர, மந்திரி சபையிலே என்ன காண்கிறோம்? அதற்கு முஸ்லீம்கள் இல்லை என்ற காரணமா? தகுதியுள்ள முஸ்லீம்கள் சட்டசபைக்கு வந்திருக்கிறார்கள். அதிலும், ஆளும் கட்சியிலேயே வந்திருக்கிறார்கள். ஆனால், அமைச்சராக அமரவில்லை. ஆனால் நாங்கள் ஜாதி அடிப்படையிலே பார்க்கவில்லை என்று மட்டும் சொல்கிறீர்கள். எது எப்படி இருந்தாலும், உண்மை நிலை என்ன என்பதை மட்டும் ஆராய்ந்து பார்க்க மக்கள் தவறி விடமாட்டார்கள் என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

மொழிவாரியான மைனாரிடி குறித்து நாம் அதிகமாக பொருட்படுத்தாதபோதிலும், மதரீதியான மைனாரிடியைக் குறித்து நாம் மிகுந்த கவனம் செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். முஸ்லிம் லீக்குக்கு எற்கனவே ஒரு கெட்ட பெயர் ஏற்பட்டிருக்கிறது. அதனுடைய இயக்கத்தின் காரணமாக நாட்டுப் பிரிவினை ஏற்பட்டு, பாகிஸ்தான் ஏற்பட்டது. பாகிஸ்தான் ஏற்பட்டுவிட்டாலும், அதற்குப் பின்னாலும் கூட 4 கோடி முஸ்லீம்கள் பாகிஸ்தான் போய் விடவில்லை, இங்கே தான் இருக்கிறார்கள். அவர்கள் இந்த நாட்டை தாயகமாக ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

**(Dputy Speaker in the Chair.)**

பிரித்துவைக்கிற முறையிலே நாம் நடந்துகொள்ளுவோமானால், அது ஒருபோதும் தேசீய ஒற்றுமைக்கு துணையாக இருக்காது என்று சொல்லிக்கொள்ளுகிறேன்.

மத அடிப்படையிலே கட்சிகள் இயங்கக்கூடாது என்பதில் நிச்சயம் ஒற்றுமைப்பாடு உண்டு. மத அடிப்படையில் இயங்குகின்ற கட்சிகள் எல்லாம் அடியோடு அரசியலில் பங்கு எடுக்கக் கூடாது என்று தடை போடுவதற்கு துணிவு அகில இந்திய அரசுக்கு ஏற்பட்டாலொழிய, முஸ்லிம் லீக்கை மட்டும் தனியாக

தடைபோட்டு தடுத்துவிடமுடியாது. ஹிந்து மகாசபை, ஜன சங்கம், தாழ்த்தப்பட்டோர் லீக் இவைகளைத் தடுத்துவிட்டு, முஸ்லிம் லீக்கை தடுக்க வேண்டும். அந்த அளவிலே அது சாத்தியமே தவிர வேறு இல்லை. தாழ்த்தப்பட்டோர் லீக் கூட்டத்தில் தலைமை வகித்துக்கொண்டே ஒரு அமைச்சர் தேசிய ஒற்றுமையைப் பற்றி பேசினால் அல்லது இதா மைனாரிடியைப் பற்றி தாக்கிப் பேசினால் அதில் பலன் ஏற்படப்போவதில்லை. நாம் சொல்லுகிற சொல்லுக்கும், செய்கின்ற செயலுக்கும் சம்பந்தம் இல்லை. படிப்பது இராமாயணம், இடிப்பது பெருமாள் கோவில் என்று மற்றவர்கள் பேசுவார்கள். தேசிய ஒற்றுமையில் அக்கறை இருக்குமேயானால், மதசார்பற்ற அரசியலை நாட்டிலே நிர்மாணிப்பதிலே நம்முடைய எண்ணமும், அக்கரையும் இருக்குமானால், மத சார்புள்ள கட்சி அரசியலில் தலையிடுவதை பகிரங்கமாக தடைப்படுத்துவதற்கு முயற்சி செய்ய முன்வரவேண்டும். அல்லது ஒரு கட்சிக்கு மட்டும் தடை போடுவதை விட்டுவிடவேண்டும், எல்லா கட்சிகளையும் செயல்பட விடவேண்டும். எல்லாக் கட்சிகளுக்கும் தடை போடும்போது, இந்த மகாசபை இல்லாமல் போகலாம். அப்பொழுதும் கூட தாழ்த்தப்பட்டோர் லீக், முஸ்லிம் லீக் தங்களுடைய சமூகத்தின் நலனுக்காக சிறிது காலத்திற்கு செயல்பட்டுத்தான் தீரவேண்டியிருக்கும். அரசியல் ரீதியில் இல்லாமல், மற்ற ரீதியில் அவர்கள் பாடுபடவேண்டும் என்பதில் ஐயப்பாடு கிடையாது. இன்னும் சில காலத்திற்கு முஸ்லிம் லீக், தாழ்த்தப்பட்டோர் லீக் இந்த நாட்டில் இருந்துதான் தீரும். அரசியல் ரீதியில் சமத்துவம் அடையும் வரையில், பொருளாதார ரீதியில் சமத்துவம் அடையும் வரையில் அந்த ஸ்தாபனங்கள் தனியாக செயல்படுவதை நாம் எதிர்த்துப் பேசுவோமானால், நான் நினைக்கிறேன் மைனாரிடியினர் தங்களுக்கு நியாயம் வழங்கப்பட்டதாக ஒருபோதும் கருதமாட்டார்கள். கம்யூனிஸ்ட் கட்சியானாலும் சரி, பிரஜா சோஷலிஸ்டு கட்சியானாலும் சரி, காங்கிரஸ் கட்சியானாலும் சரி, யார் என்ன பேசினாலும் மைனாரிடியினரைப் பொறுத்த வரையில் மெஜாரிடி சமூகத்தைச் சேர்ந்தவர்கள் தங்களை நசுக்குவதற்காக தேசீய ஒற்றுமை என்ற போர்வையிலே, மதசார்பற்ற சமுதாயம் என்ற போர்வையிலே செயல்படுகிறார்கள் என்று கூறுவார்களே தவிர, வேறு வகையிலே சொல்லமாட்டார்கள் என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

பல்வேறு கட்சிகளும் தங்களுக்கு விருப்பமான இடங்களிலே மதஸ்தாபனங்களுக்கு ஆதரவு கொடுப்பதைக் குறித்து எனக்கு முன்னாலே பேசிய நண்பர் அவர்கள் சொன்னார்கள். முஸ்லிம் லீக்குக்கு ஒரு வகையிலே இடம் கொடுப்பவர்கள் மைனாரிடிக்கு பாதுகாப்பு கொடுப்பதற்கு, நம்பிக்கை ஊட்டுவதற்கு அதைச் செய்கிறோம் என்று சொல்லலாம். மகாராஷ்டிரத்தில் கம்யூனிஸ்ட் கட்சியோடு இந்துமகா சபா செயல்படுகிறார்கள். மகாராஷ்டிரம் ஏற்பட்டுவிட்டாலும் கூட மகாராஷ்டிர சமிதி என்று ஒரு ஸ்தாபனத்தை வைத்துக்கொண்டு, இந்து மகாசபையோடு இணைந்து செயல்படுகிறார்கள். அதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது என்று எனக்குப் புரியவில்லை. இந்து மகாசபா இருக்கவேண்டிய அவசிய

13th November 1961] [Sri P. S. Chinnadurai]

மே இருக்காது. யாருடைய நலனை பாதுகாப்பதற்காக அந்த ஸ்தாபனம் இயங்கவேண்டும்? மிகப் பெரிய சமூகத்தினரான இந்துக்களுக்கு யாரிடமிருந்து ஆபத்து வந்திருக்கிறது? யாரிடமிருந்தும் ஆபத்து வரவில்லையே? அப்படியிருக்கும்பொழுது இந்து மகாசபா இருக்கவேண்டிய அவசியமே இல்லையே? இந்து மகாசபா தனியாக ஒரு கிளை ஸ்தாபனத்தை மகாராஷ்டிரத்தில் வைத்துக்கொண்டு, அகில உலக ஸ்தாபனம் என்று சொல்லிக் கொண்டிருக்கிற கம்யூனிஸ்டு கட்சியை ஏன் சார்ந்திருக்கவேண்டும் என்று எனக்குப் புரியவில்லை. நாட்டிலே இம்மாதிரி எத்தனையோ விதமான காரியங்கள் நடந்துகொண்டிருக்கின்றன. இந்த ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்களெல்லாம் தேசிய ஒற்றுமை மகாநாட்டில் பங்கு எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

என்னுடைய அபிப்பிராயம் தேசிய ஒற்றுமை மகாநாட்டிற்கு திராவிட முன்னேற்றக் கழகமும் அழைக்கப்பட்டிருக்கவேண்டும் என்பது தான். திராவிட முன்னேற்றக்கழகம் பிரிவினையை வற்புறுத்தி வந்தபோதிலும் கூட, அவர்கள் அப்படிப்பட்ட மகாநாடுகளில் கலந்துகொள்ளுவதின் மூலம், கருத்துக்களை பரிமாரிக் கொள்ளுவதற்கு ஒரு வாய்ப்பு ஏற்படும். என்னுடைய ஆசை ஒன்று உண்டு. திராவிட முன்னேற்றக் கழகத்தில் தேர்ச்சி அடைந்த வாலிபர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்களுடைய சக்தியெல்லாம் இன்றைக்கு விரயமாகிக்கொண்டிருக்கிறது. எங்கேயோ பாழும் நிலத்தில் கொண்டுபோய் விதைத்தால், பாறையில் கொண்டுபோய் நல்ல வித்துக்களைப் போட்டால் அது முளைக்குமா? முளைக்காது. அதுபோல நல்ல வித்துக்களை பாழும் நிலத்தில் விதைக்கிறார்கள் என்று நான் கருதுகிறேன். இந்த நிலைமை மாற வேண்டுமென்ற ஆசை எனக்கு உண்டு. திராவிட முன்னேற்றக் கழகமாக மாத்திரம் அல்லாமல் பாரத முன்னேற்றக் கழகமாக அது வளர்ச்சியடையவேண்டும் என்று ஆசைப்படுகிறேன். அதுதான் என்னுடைய மனதில் இருப்பதே தவிர, அவர்கள் நாட்டுப்பிரிவினை வேண்டும் என்ற குறுகிய எண்ணத்தைக் கொண்டவர்களாக இருந்தால் அது சரியானது அல்ல என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடிக்கடி சமீபகாலத்தில் பேசப்பட்டு வருவது உள்நாட்டு யுத்தம் என்பது பற்றி. அதற்கு ஆதாரம் உண்டா, இல்லையா என்பது எனக்குத் தெரியாது. இங்கு யார் யுத்தம் செய்ய பழகிக்கொண்டிருக்கிறார்கள். உள்நாட்டு யுத்தம் வந்தாலும் வரும் என்று ஒருவர் கூறுவதும், உள்நாட்டு யுத்தம் வந்தாலும் வரட்டும், பார்த்துவிடுவோம் அதற்கு விடமாட்டோம் என்று இன்னொருவர் கூறுவதும், ஆக இப்படிப்பட்ட நிலைமை இருப்பதைப் பார்க்கிறோம். உள்நாட்டு யுத்தம் வருவதற்கு ஒருபோதும் சந்தர்ப்பம் கிடையாது. யுத்தத்தை சாதாரணமாகவே மக்கள் ஆதரிப்பதில்லை. அதுவும் உள்நாட்டு யுத்தத்தை நிச்சயம் ஆதரிக்கமாட்டார்கள். இந்த நிலைமையில் உள்நாட்டு யுத்தம் செய்வோம் என்று எவரேனும் சொல்வார்களேயானால், நாட்டுப் பிரிவினைக்கு உள்நாட்டு யுத்தம் வரும் என்று திராவிட முன்னேற்

அமைத்துக் கொடுத்துக்கொண்டு வருகிறார். ஆகவே அந்த முறையில் இதைக் கவனித்து ஆராய்ந்து பார்த்தால் ஒரு நல்ல முடிவைக் காண முடியும். 'இந்தியன் யூனியன்' அமைந்து இருக்கிறதென்று சொல்லப்படுகின்றது. இந்த இந்தியன் யூனியன் காமன்வெல்த்தில் ஒரு நாடாக இருப்பதுபோல், பல நாடுகள் பிரிக்கப்பட்ட பின்னரும்கூட, காமன்வெல்த்திலே எப்படி பல நாடுகள் அங்கம் வகித்துக்கொண்டு வருகிறதோ அதைப்போல நம் நாட்டிலும் ஆங்காங்கு தனி அரசுகள் ஏற்பட்ட பிறகும் காமன்வெல்த்திலே அங்கம் வகிக்கக்கூடிய நாடுகளாக அவைகளும் திகழலாம். அப்படி ஒவ்வொன்றும் ஒரு உறுப்பினராகச் சேர்ந்து உலகம் பூராவும் ஒன்று என்று நினைக்கக்கூடிய வகையிலே சேர்ந்து கொள்ளலாம். ஆகவே பிரிந்து போகிறோம் என்று யாரும் கருதத் தேவையில்லை. நம்முடைய உரிமையை நாம் கேட்கிறோம். அதுவும் வரலாற்றின் அடிப்படையிலே, பண்பாட்டின் அடிப்படையிலே கேட்கிறோம். எங்களால் முடிந்தால் பெறுகிறோம். இல்லையென்றால் இந்த முயற்சியில் தோல்விகண்டு மடிந்து போகிறோம். ஆனால் நாங்கள் மடிந்து போனாலும் இந்த உணர்ச்சி மட்டும் என்றைக்கும் மடிந்து விடாது என்பதைத்தான் நான் இந்த நேரத்திலே தெளிவாக, திட்டவட்டமாகச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நீங்கள் இதன் உண்மையை உணராத காரணத்தால்தான் இவ்வளவு தூரம் சொல்லவேண்டியிருக்கிறது. இதற்காக ஒரு விளக்கம் கொடுக்க விரும்புகிறேன். இரண்டு நாடுகள் ஒன்றாக இணைந்து நல்ல முறையிலே ஆட்சி நடைபெற முடியுமா என்பதைச் சமீபத்திலே நடைபெற்ற சம்பவம் ஒன்றை எண்ணிப் பார்க்கும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன். 1958-லே எகிப்துக்குப் பக்கத்திலே இருக்கக்கூடிய சிரியா என்ற நாடும் எகிப்தும் சேர்ந்து 'யுனைடெட் அராபிக் ரிபப்ளிக்'—அதாவது 'அராபிய தேசியம்' என்ற வகையில் இணைந்து ஆட்சி புரிந்தது. அப்படி இரு நாடுகளும் ஒன்றாக இணைந்தபோது, நம் நாட்டுத் துணை ஜனாதிபதி அவர்களும், குடியரசுத் தலைவர் அவர்களும் வாழ்த்துச் செய்திகளை அனுப்பினர். பத்திரிகைகள் எல்லாம் தலையங்கங்கள் எழுதின. மூன்று ஆண்டுக் காலமாக சிரியா, எகிப்து ஆகிய நாடுகளிலே 'அராபிய தேசியம்' என்ற பெயரிலே ஆட்சி நடந்தது. ஆனால் சிரியாவில் எகிப்தின் ஆதிக்கம்தான் நடைபெற்று வந்ததால் நேற்றையத் தினம் பிரித்துக் கொண்டார்கள். ஆகவே இரண்டு நாடுகள் ஒன்று சேர்ந்து ஆட்சி நடத்த முடியவில்லை என்பது இதிலிருந்து நன்கு தெரிந்த விஷயம். ஆனால் உதாரணத்திற்கு சேர்ந்தவர்கள் பிரிவதற்கும், பிரிந்தவர்கள் சேருவதற்கும் சொல்லவேண்டுமென்றால் நிரம்ப இருக்கின்றன. ஆகவே இந்த உதாரணத்தைக் காட்டி, அதை மறுக்கவோ அல்லது அந்த உதாரணத்தைக் காட்டி இதை மறைக்கவோ செய்யலாம் என்று நினைத்தால் அது தவறான கருத்தாகும். அந்த ஆராய்ச்சிக்கு இப்போது நாம் இறங்கத் தேவையில்லை. நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் திட்டவட்டமாக ஒரு விஷயத்தைச் சொன்னார்கள். அவர்கள் சொன்னபோது நேரு அவர்களின் குரல் என் காதில் கேட்பதுபோல் தொனித்தது. அதாவது "இனி பிரிவினை இல்லை" என்று அவர் சொன்னார். அப்படி அவர் சொன்னதி

13th November 1961] [C. N. Annadurai]

லிருந்து பார்க்கும்போது முன்பு ஏதோ ஒரு பிரிவினைக்கு வழி இருந்தது போலவும், அதற்கு அவர்கள் ஒப்புக்கொண்டு இருக்கிறார்கள் என்றும் ஊகிக்க முடிகிறது. எது எப்படியிருந்தாலும், என்றைக்காவது ஒரு நாள் சூழ்நிலை இவர்களை நிச்சயம் இணங்க வைக்கத்தான் போகின்றது. நாங்கள் அந்தச் சூழ்நிலையை உண்டாக்கிக் கொண்டு வருகிறோம். நேரம் வருகின்ற காலத்தில் அது தானாகவே பயனைக் கொடுக்கும். ஆனால் இன்றைக்கு இப்படி பேசிவிட்டு, இனி பிரிவினை கிடைக்காது என்று சொல்லிவிட்டால் மட்டும் போதாது. **'In this age of atomic bomb and the rapidly changing world, problems like that of Pakistan have no bearing and meaning.'** நம்முடைய பண்டித நேரு அவர்கள் சொன்னதுதான் இது. 'அணுகுண்டு சகாப்தத்திலே அற்பத்தனமாக பகுதிகள் கேட்கிறார்கள்' என்று சொல்லி, அதற்குப் பதிலாக இதிலே எவ்வித பவரும் இல்லை; மீனிங்கும் இல்லை என்று சொல்லப்படுகிறது. அதாவது இதிலே எவ்விதப் பொருளும் அர்த்தமும் இல்லையென்று சொல்லப்பட்டது. அதுமட்டுமல்ல. கனம் நிதி அமைச்சர் அவர்கள் மதுரையிலே பேசுகையில் பண்டித நேருவை நேரில் வைத்துக்கொண்டு பேசியிருக்கிறார்கள். **'Americans who fought the Civil War to keep their Union together can appreciate how a proposal to divide the country is resented by vast numbers of the Indian people.'** உள்நாட்டு யுத்தத்தை நடத்தியாகிலும் அமெரிக்கர் தங்களை, தங்கள் நாட்டைக் காப்பாற்றிக் கொண்டார்கள் என்பதை மட்டும் உணர்ந்துள்ளார்கள் என்று கருதுகிறேன். ஆனால் இங்கே மட்டும் ஒரு சிலரை அடக்கி விட்டால் போதும்; மற்றவர்களைப் பற்றி எந்தவிதமான கவலையும் இல்லை என்று நினைக்கிறார்கள். இப்படித்தான் பண்டித நேரு அவர்களும் முதலிலே பேசினார். ஆனால் கடைசியில் பாகிஸ்தான் பிரச்னை வலுவடைந்து, பாகிஸ்தான் தனியாகப் பிரிந்தது. இதுபற்றி பிறகு நம்முடைய கனம் நிதி அமைச்சர் அவர்கள் ஒரு பதில் சொல்வார் என்று கருதுகிறேன். இதற்கு கனம் அமைச்சர் அவர்கள் ஒரு பதில் சொல்லக்கூடும். ஆனால் அது சரியல்ல. அதாவது வெள்ளைக்காரர்கள் இருந்தார்கள்; அது நடந்தது என்று சொல்லக்கூடிய ஒரே ஒரு பதிலைத்தான் அவர்கள் வைத்திருக்கக் கூடும். ஆனால் வெள்ளைக்காரர்கள் இருந்தார்கள். அதனால் கொடுத்து விட்டோம் என்று சொல்வதை விட நம்முடைய நண்பர் கனம் அங்கத்தினர் சின்னதுரை அவர்கள் சொன்னது போல் இவர்களுக்குக் கொடுக்கக்கூடாது என்ற ஓர் எண்ணம் இருந்திருக்குமானால் இரத்தம் சிந்தியாவது இதைத் தடுத்திருக்க முடியும். ஆனால் அவர்களுடைய கொள்கை அது அல்ல என்பது மறுக்க முடியாத உண்மையாகும். பாகிஸ்தான் பிரச்னை வலுவடைந்தவுடன், **'In this age of Atomic bomb, there is no place for Pakistan'** என்ற அதே நேரு அவர்கள் ஒருதரம் **'The Congress position was that India should remain a National Unit. But at the same time if the population of a unit specifically declared that they would not be in the Common unit,**

then the Congress would not compel them to stay in the unit. Thus the Congress recognized the right of separation or self-determination.' என்று சொல்லியிருக்கிறார். நான் இந்த நேரு அவர்களைத்தான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் உள்நாட்டு யுத்தம் வந்தாலும் தடுத்துத் தீரவேண்டுமென்றார்கள். ஆனால் அப்படிப்பட்ட நேருவை நாங்கள் எதிர்பார்க்கவில்லை. இப்போது நான் சொன்ன நேருவைத்தான் நம்புகிறேன். காலம் தான் வர வேண்டுமென்ற அருமையான கருத்தை பண்டித நேரு அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இங்குள்ளவர்களோ, எங்கள் கட்சியிலே உள்ள முக்கியமான 10, 15 பேர்களை ஒழித்துக் கட்டிவிட்டால், பிரச்னை தீர்ந்தது என்று நினைக்கிறார்கள். இத்தகைய அடக்குமுறையைத்தான் செய்ய வேண்டுமென்று இவர்கள் சொல்கிறார்கள். இந்தப் பிரச்னை, இந்த லட்சியம் நாங்களாக எடுத்துக்கொண்டதல்ல; அல்லது உங்களைப் புண்படுத்த வேண்டுமென்றோ, விரோதித்துக்கொள்ள வேண்டுமென்றோ நாங்கள் ஏற்படுத்திக் கொண்டதல்ல. உங்களிடத்திலே நட்பாக இருக்க வேண்டும், நேசமாக இருக்கவேண்டுமென்ற நல்லெண்ணம் எங்களுக்கெல்லாம் இருக்கிறது. உங்களுடன் ஒத்துழைத்து உங்களுடைய நல்லெண்ணத்தையும், மகிழ்ச்சியையும் நாங்களும் பெற வேண்டுமென்றுதான் நினைக்கிறோம். இப்போது நான் பேசுகின்ற அத்தனை பேச்சுக்களையும் காங்கிரஸ் உறுப்பினர்கள் எவ்வளவு அருவருப்போடு கேட்கிறார்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் அதையும் நான் தாங்கிக் கொள்கிறேன். உங்களையெல்லாம் நான் மதிக்கிறேன்; அதைவிட மேலாக நான் எங்கள் உரிமையை மதிக்கிறேன் என்று சொல்லிக் கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

* **THE HON. SRI C. SUBRAMANIAM :** உதவி சபாநாயகர் அவர்களே, திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள் கொஞ்ச அதிக நேரம் எடுத்துக்கொண்டு விரிவாகப் பேசியதற்காக நான் அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். ஏனென்று சொன்னால் பல பேருக்கு எந்த அடிப்படையிலே இந்த இந்திய தேசிய ஒருமைப்பாடு கூடாது என்று திராவிட முன்னேற்றக் கழகத்தினர் சொல்கிறார்கள் என்பதைப்பற்றி விளக்கம் இல்லாமல் இருந்தது. இதற்கு அவர்கள் இன்று விளக்கம் தந்து இருக்கிறார்கள். இந்த விளக்கம் வரலாற்று அடிப்படையிலே ஸ்ரீ ராதாகிருஷ்ணன் அவர்கள் தன்னுடைய உரையில் குருக்ஷேத்திரம்' என்று குறிப்பிட்டுச் சொன்னது முதல் அதிலேயிருந்து எடுத்து இன்றைக்கு இந்தியா ஒரு அரசியல் ஆட்சியின்கீழ், உள்ளது நல்லதா என்ற ஒரு கேள்வியைப் போட்டு அதற்கு வரலாற்றிலே இந்தியா என்றைக்குமே ஒரு கொடியின்கீழ் இல்லாமல் இருந்திருக்கிறதென்றும், என்றைக்குமே ஒரு எல்லைக்கோட்டுக்குள், அடங்கி இருக்க வில்லையென்றும் எடுத்துச் சொன்னார்கள். இதற்கெல்லாம் வரலாற்றின் அடிப்படையிலே ஆதாரத்தை எடுத்துக் காண்பித்தார்கள். ஆனால் இவ்வளவு பேசிய அவர்கள் இன்றைக்கு இந்தியா

13th November 1961] [Sri C. Subramaniam]

ஒரே ஆட்சியின்கீழ் இருப்பதினல் என்னென்ன தடைகள், என்னென்ன குறைகள் நமக்கு இருக்கின்றனயென்பதை மட்டும் பேசவில்லை.

என்றைக்கும் இல்லாத அரசியல் ஒற்றுமை, ஒரு அரசின்கீழ் எதற்காக இன்று வரவேண்டும் என்று கேட்கிறார் கள். ஆனல் உலகத்தில் இன்றைக்கு ஒன்ருக இருக்கக்கூடிய எந்த நாட்டையும் எடுத்துக்கொள்ளுங்கள். முதலில் பிரிட்டிஷ் நாட்டையே எடுத்துக் கொள்ளுங்கள். இன்றைக்கு பிரிட்டன் ஒரே அரசாங்கத்தின்கீழ் வருவதற்கு முன்னல் வேல்ஸ், ஸ்காட் லாந்து, இங்கிலாந்து ஒன்ருக இணைந்திருந்ததா? ஒரு பகுதி யினர் இன்னெரு பகுதியுடன் சண்டை போட்டுக் கொண்டுதான் இருந்தார்கள் ஒரு பக்கத்தில் இருக்கும் அரசர் இன்னெரு பக்கத்தில் இருப்பதைச் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்று சாம்ராஜ்ய அடிப்படையில் சண்டை போட்டுக்கொண்டிருந்தார் களே தவிர, ஒன்றுபட்டிருந்ததை அங்கு காண முடியாது. இன்றைக்கு அந்த நாடு ஒன்ருக இருந்து, ஒரே அரசியலின் கீழ் நடைபெற்று வருகிறது என்கிற காட்சியைக் காண்கிருேம். ஆயிரம், 2,000 வருஷங்களுக்கு முன்பு பிரிந்து சண்டை போட்டுக் கொண்டிருந்த நிலை இருந்திருந்தாலும், பிரிந்து போக வேண்டும் என்ற ஒரு உணர்ச்சி ஒரு சிலருக்கு ஏற்பட்டாலும்கூட, ஒன்று கூடி இருந்தால் நல்லது என்று உணர்ந்து ஒன்று சேர்ந்ததால், அதன் காரணமாக இன்றைக்கு உலகத்தில் முன்னுக்கு வரக்கூடிய நிலைமையை அவர்கள் பெற்றிருக்கிருர்கள். அந்த நிலைமைதான் ஏற்பட்டிருக்கிறது.

அடுத்தபடியாக ரஷ்யாவை எடுத்துக் கொள்ளுவோம். ரஷ்ய வரலாற்றிலே முற் காலத்தில் அது ஒரு ஆட்சியின்கீழ் இருந்திருக் கிறதா என்று பார்த்தால், கிடையாது. நம் நாட்டிலாவது கலா சார ஒற்றுமை, பண்பு, ஒற்றுமை, மத ஒற்றுமை ஓரளவுக்கு இருந்து வருகிறது. பரந்த அந்த நாட்டில் ஒரு இனத்திற்கும், இன்னெரு இனத்திற்கும் தொடர்பே கிடையாது. தொடர்பு ஏற்பட்டிருந்தால் சாம்ராஜ்ய அடிப்படையில், ரஷிய 'எம்பையர்' என்ற அடிப்படையில் ஒரு சில காலத்தில் ஏற்பட்டிருந்தாலும், மற்ற காலத்தில் ஏற்படவில்லை. ரஷ்ய மக்கள் தொன்று தொட்டு நாங்கள் பிரிந்து வாழ்ந்திருக்கிருேம், எதற்காக இன்று ஒற்றுமை யாக ஒரே அரசியலின்கீழ் இருக்க வேண்டும் என்று கேட்கக் கூடிய நிலைமை இல்லை. அதேமாதிரி அமெரிக்காவை எடுத்துக் கொண்டால், முதன் முதலில் தனித்தனி ராஜ்யமாக அமைந் திருந்தது. வெவ்வேறு மொழிகள் பேசப்படும் பகுதிகள் ஐரோப்பாவிலிருந்து பல நாடுகளிலிருந்து வந்தவர்கள் என்பதை நாம் பார்க்கிருேம். ஆனல் இன்று ஐக்கியப்பட்டு நாடாக அமைந்து உலகத்திலேயே முதன்மைபெற்று விளங்கு கிறது. மனித சமுதாயத்தில் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிற காலத்தில் நாம் வாழ்கிருேம். ஆரம்ப காலத்தில் ஒரு குடும்பம், குடும்பமாக கூடியிருந்தால் போதும் என்று நினைத் திருக்கலாம். ஆனல், இன்று சமுதாயம் வளர்ச்சி அடைந்து கொண்டே வந்திருக்கிறது என்பதை பார்க்கிருேம். ஆகையினலே,

தொன்றுதொட்டு வரலாற்றைப் பார்த்தால் நாடு பிரிந்திருந்தது, ஆதலால் அது இன்றும் பிரிந்துதான் இருக்கவேண்டும் என்கிற வாதம் பொருந்தாது என்பதை அவர்களுக்கு பணிவோடு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அப்படி அவர்களுடைய வாதத்தை ஒப்புக்கொண்டு எடுத்துக் கொண்டாலும், வரலாற்று அடிப்படையில் பார்த்தால் எந்தக் காலத்தில் திராவிட நாடு ஒன்றாக ஒரே அரசியலின்கீழ் இருந்திருக் கிறது? வரலாற்றைத் திருப்பித் திருப்பி பார்ப்போமானால், வேண்டு மானால் ஒரு பக்கத்தில் விஜயநகர மன்னன் சில பகுதிகளை சேர்த்துக்கொண்டிருக்கலாம், இன்னொரு பக்கத்தில் சேர, சோழ அல்லது பாண்டிய மன்னன் வேறு சில பகுதிகளைச் சேர்த்துக் கொண்டிருக்கலாம். அந்த அடிப்படையில் ஒரு சில பகுதிகள் சேர்ந்திருக்கலாமே ஒழிய, திராவிட நாடு எக்காலத்திலும் ஒன்றாகச் சேர்ந்திருந்ததில்லை.

வரலாற்றில் தமிழ் நாட்டை எடுத்துக்கொண்டால், தமிழ் நாடு என்றைக்கு ஒரே அரசியலின்கீழ் இருந்திருக்கிறது? மூவேந்தர்கள் ஆண்ட நாடுதானே இது. அதன் காரணமாக வரலாற்றின் அடிப் படையிலே பாண்டிய நாடு, சேர நாடு, தொண்டை நாடு, கொங்கு நாடு என்று பிரிக்கப் போகிறார்களா? இதை நான் கேலிக்காகச் சொல்லவில்லை. வரலாற்று அடிப்படையில் உங்களைக் கேட்கிறேன்? என்றைக்கு தமிழ் நாடு ஒரே அரசியலின்கீழ் இருந்தது? என்றைக்கும் மூவேந்தர்கள் ஆண்டுவந்தார்கள். ஒருவருக் கொருவர் சண்டை போட்டுக்கொண்டிருந்த நிலைமை இருந்ததே தவிர, ஒரே ஆட்சியின்கீழ் இருந்ததில்லை. வரலாற்று அடிப் படையில் தனியாகப் பிரியவேண்டும் என்று வாதம் செய்வார்களே யானால், திராவிட நாடு அமைந்திருக்கக்கூடிய காலத்தில் அண்ணா துரை பிரதம மந்திரியாக உட்கார்ந்திருப்பதாக கற்பனை செய்து கொள்ளுங்கள். வரலாற்றில் என்றைக்கு இந்திய நாடு ஒன்றாக இணைந்திருந்தது. ஆகவே, திராவிட நாடு பிரிய வேண்டும் என்று சொல்லும்பொழுது, வரலாற்றின் அடிப்படையில் தமிழ் நாடும் பிரிந்துதானே இருந்தது, சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு, கொங்கு நாடு என்று பிரிந்து தனித்தனி அரசாகத்தான் இருந்தது. ஆகவே, இதையெல்லாம் பிரித்துக்கொடுக்க வேண்டுமென்று சொன்னால் அப்பொழுது அண்ணாதுரை அவர்கள் சோழ நாட்டை பிரித்துக் கொடுத்து விடுவார்களா, பாண்டிய நாட்டை பிரித்துக் கொடுத்து விடுவார்களா? அப்பொழுது அவர்களுடைய விடை என்னவாயிருக்கும் என்பதைக் கற்பனை செய்து பாருங்கள். இதிலே இருக்கக் கூடிய முக்கியமான கஷ்டம் இதுதான். இன்றைக்கு கழகத்தினர் கேட்கிறார்கள், ஏன் இமயமலையை எல்லை யாக வைத்துக்கொள்ள வேண்டுமென்று, நானும் கேட்கிறேன், ஏன் ஹைதராபாத்தை எல்லையாக வைத்துக்கொள்ள வேண்டு மென்று. இம்மாதிரி இரண்டு பக்கமும் வாதம் செய்யலாம். வரலாற்றை வைத்துக்கொண்டு யாரையும் ஏமாற்ற முடியாது. வரலாற்றின் அடிப்படையில் பார்த்தால் எந்தப் பகுதியும் சேர்ந் திருக்கவே முடியாது, கிராமமும், கிராமமும் சேர்ந்திருக்க முடி

13th November 1961] [Sri C. Subramaniam]

யாது, ஊரும் ஊரும் சேர்ந்திருக்க முடியாது, பிறகு குடும்பமும் குடும்பமும் சேர்ந்திருக்க முடியாது என்று சொல்லிக்கொண்டே போகலாம். இன்றைக்கு மனித சமுதாயம் வளர்ச்சி அடைந்து வருகிறது. பழைய காலத்தில் அவ்வாறு பிரிந்து இருந்தது. ஆகவே அதை முறையில் ஏற்பாடு செய்யவேண்டுமென்ற கருத்தை வலியுறுத்திக் கொண்டிருப்பதில் பயன் இல்லை. இன்றைக்கு சமுதாயம் வளர்ந்துக்கொண்டே போகிறது. இமயத்தைத் தாண்டுவது மட்டுமல்ல, நாம் வேண்டும் என்று சொன்னாலும், வேண்டாம் என்று சொன்னாலும் ஒரு காலத்தில் தற்காலத்திய நாட்டு எல்லைகளெல்லாம் இருக்கப் போவதில்லை. அந்த முறையில் மனித சமுதாயம் வளர்ச்சியுற்று வருகின்றது.

இந்திய ஒற்றுமை என்று சொன்னால் அதற்காக தமிழை விட்டுக்கொடுக்க தயாராக இருக்கிறீர்களா என்று அண்ணாதுரை அவர்கள் கேட்டார்கள். திராவிடத்தில் நான்கு மொழிகள் இருப்பதால் திராவிட ஒற்றுமை என்று வரும்பொழுது தமிழை விட்டுக் கொடுக்க தயாராக இருக்கிறார்களா என்று கேட்க விரும்புகிறேன். (ஆரவாரம்) திராவிட ஒற்றுமைக்காக தமிழ் மொழியை தியாகம் செய்வதற்கு தயாராக இருக்கிறார்களா? உயிரைக் கொடுப்பதற்கு தயாராக இருப்பவர்கள் தமிழ் மொழியை விட்டுக்கொடுப்பதற்கு தயாராக இருக்கிறோம் என்கிற முறையில் சொல்ல முடியுமா? ஆனால் அதற்கு அவசியம் இல்லை என்பதை விளக்க விரும்புகிறேன். பன்மொழி பேசுகின்ற நாடுகள் இணைந்திருக்க முடியும் என்பது எங்கள் கருத்து.

இதுவரையில் கொஞ்சம் எனக்கு மனதில் சந்தேகம் இருந்தது. எந்த அடிப்படையில் திராவிட நாடு வேண்டும் என்று நினைக்கிறார்கள் என்பதுபற்றி. இன்றைக்கு அதுபற்றி விளக்கம் கொடுத்திருக்கிறார்கள், திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள். அதற்காக அவர்களுக்கு நாம் கடமைப்பட்டிருக்கிறோம், மக்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள், நாடு கடமைப்பட்டிருக்கிறது என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். வரலாற்று அடிப்படையில், 1,000, 2,000 வருஷங்களுக்கு முன்பு இருந்த நிலைமையை எடுத்துச் சொல்லி, அந்த அடிப்படையில் வாழ விரும்புகிறோம் என்று சொன்னால், அதைப்பற்றி நான் என்ன சொல்லுவது என்பது எனக்குப் புரியவில்லை. மற்றவர்கள்தான், மக்கள்தான் அதற்குப் பதில் சொல்ல வேண்டும்.

இன்னொன்று கூற விரும்புகிறேன். அந்தக் காலத்தில் வள்ளுவர் தோன்றினார். ஆகவே, அந்த முறையில் வாழ விரும்புகிறோம் என்றால், அன்று இருந்த சூழ்நிலை வேறு, இன்று இருக்கும் சூழ்நிலை வேறு. அந்நிய நாட்டு ஆட்சி இருந்த காலத்தில் பாரதி தோன்றினார். அதற்காக அன்னிய ஆட்சி தொடர்ந்து நீடிக்க வேண்டுமென்ற கருத்தைச் சொல்ல முடியுமா? இந்தக் காலத்திலும் கலைஞர்கள், மேதாவிகள், நிபுணர்கள், அறிஞர்கள் தோன்றியிருக்கிறார்கள். ஏதோ ஒரு நிலையில்தான் இவர்கள் தோன்ற முடியும், ஆகையினால் அந்த நிலைக்குப் போக விரும்புகிறேன் என்று சொல்லுவது சரியல்ல. வள்ளுவர் தோன்றிய சூழ்நிலையை வகுத்து, அந்த சமுதாயத்திலே வாழ விரும்புகிறார் தி.மு.க. தலைவர்கள். அந்தக் காலத்தில் இருந்த அளவிலே, இருந்த சூழ்நிலை

[Sri C. Subramaniam] [13th November 1961

யிலே அவர்கள் வளமாக, செழிப்பாக அன்றைக்கு வளர்ந்து வாழ்ந்திருக்கலாம். ஆனால், அன்றைக்கு இருந்த சூழ்நிலை வேறு, இன்றைக்கு இருக்கிற சூழ்நிலை வேறு. ஆயிரம், 2,000 வருஷங்களுக்கு முன்பு இருந்த சூழ்நிலை வேறு. மனித சமுதாயம் மேலும் மேலும் வளர்ச்சி அடைந்துகொண்டே வந்துள்ளது. பின்னேக்கி போகக்கூடிய காலம் அல்ல இது, முன்னேக்கி போகக்கூடிய காலம் இது என்பதை அண்ணுதுரை அவர்களுக்கும், திராவிட முன்னேற்றக் கழகத்தினருக்கும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். தி.மு.க. தலைவர் ஐ.நா-வுக்குச் சென்று திராவிட நாட்டுப் பிரிவினையைப்பற்றி வாதாடுவேன் என்று சொன்னதாக கேள்விப்பட்டேன். வரலாற்று அடிப்படையில் 1,000 வருஷங்களுக்கு முன் இருந்த நிலை அடிப்படையில் திராவிடநாடு கேட்பதாக தயவுசெய்து ஐக்கிய நாட்டுச் சபையில் சொல்லிவிடாதீர்கள். அங்குபோவதற்குள்ளாக வேறு ஏதாவது வார்த்தை தேடி வைத்துக்கொள்ளுங்கள் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

திராவிட நாட்டிற்காக உள்நாட்டுக் கலகம் செய்யப்போவதில்லை என்று சொன்ஞர்கள். எனக்குத் தெரியாதா யார் உள்நாட்டுக் கலகம் செய்யக்கூடியவர்கள் என்று. நேருஜி அவர்களிடமே சொன்னேன் 'அவர்கள் எனக்குப் பழக்கம் உண்டு, அவர்களெல்லாம் இப்படி செய்யக்கூடியவர்கள் அல்ல' என்று. அப்படி வந்தாலும் சமாளிப்பதற்கு தயாராக இருக்கிருேம், உள்நாட்டுக் கலகம் வரும் என்ற பூச்சாண்டிக்காக யாரும் பயப்படபோவதில்லை.

உரிமை, உரிமை என்று பேசுகிருர்கள். உரிமையை யார் நிர்ணயிப்பது? அதற்காகத்தான் நான் சொல்லுகிறேன், மக்கள் தீர்ப்பு அளித்தாக வேண்டும், மக்கள் தீர்ப்பு அளிப்பார்கள் என்று. அப்படி மக்கள் தீர்ப்பு அளித்தாலும் ஒப்புக்கொள்ள முடியாது என்று திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் சொல்லுகிருர்கள். இன்றைக்கு மக்கள் முன்னிலையில் பிரிவினை அடிப்படையில் தேர்தலுக்கு வாருங்கள். பிரிவினையை ஒப்புக்கொள்ளாத ஒரு கட்சியோடு கூட்டு சேர்ந்துக்கொண்டு, திராவிட பிரச்சினையை ஒரு பக்கம் ஒதுக்கி வைத்து விட்டு தேர்தலுக்கு நின்று மக்களை ஏமாற்றக்கூடாது. திராவிட நாடு பிரிவினை அடிப்படையில் இன்றைக்கு தேர்தலுக்கு நிற்கட்டும்; அதன் முடிவை தெரிந்து கொண்டு விடலாம். பிரிவினையை தி.மு.க. கட்சி ஒன்று மட்டும்தான் விரும்புகிருர்கள். மற்ற எந்தக் கட்சியும் ஆதரிப்பது கிடையாது. ஆகையினுல், இன்றைக்கு மற்ற எல்லோரும் சொல்லுவதெல்லாம் சரி அல்ல, அவர்கள் சொல்லுவதெல்லாம் நியாயம் அல்ல, நான் ஒருவன் சொல்லுவது மட்டும்தான் நியாயம் என்று சொல்லுவது சர்வாதிகாரத்திற்கு ஒக்குமே தவிர, நாட்டிலுள்ள ஜனநாயக முறைக்கு ஒத்துக்கொள்ளாது என்பதை வலியுறுத்துகிறேன். ஆகவே இன்றைக்கு திராவிட முன்னேற்றக் கழகத்தினர் நேருவுக்கல்ல பதில்சொல்ல வேண்டியது; மற்றவர்களுக்கு அல்ல பதில் சொல்ல வேண்டியது. அவர்கள் பதில் சொல்ல வேண்டியது, தமிழ் நாட்டுத் தலைவர்களுக்கு, தமிழ்நாட்டு இளைஞர்களுக்கு, தமிழ் நாட்டு மக்களுக்கு. அவர்கள் உங்கள் பக்கம் இருக்கின்ருர்களா என்று பாருங்கள். ஆதரவு இருக்கிறதா என்று பாருங்

கள். மக்கள் ஆதரவு இல்லையென்றால், நீங்கள் மைனாரிடிதான். ஒரு சிலர்தான் என்ற நிலைமை ஏற்படுமேயானால், பெரும்பாலான மக்கள் பிரிவினை எங்களுக்குத் தேவையில்லை என்று சொல்லும் போது, இன்றைக்கு இருக்கும் ஜனநாயக அடிப்படையில், பெரும்பாலான மக்கள்தான் தங்கள் உரிமை என்ன என்று தீர்மானிக்க வேண்டும் என்று இருக்கும் நிலையில் "நான் அறிஞராக இருப்பதால் நான் சொல்லுவதுதான் சரி" என்று சொல்ல முடியாது. மக்கள் சொல்லுவதுதான் சரி. நான் சொல்லுவது அல்ல, காமராஜ் சொல்லுவது அல்ல, அண்ணாதுரை சொல்லுவது அல்ல, தமிழ் மக்கள் சொல்லுவதுதான் சரி. அந்த அடிப்படையில் தான் நான் சொன்னேன், தேர்தலைப்பற்றி ஏதோ சட்டசபையில் பதவியைப்பற்றி யல்ல, இன்றைக்கு உங்கள் கருத்துக்கு தமிழ் மக்கள் எதிர்ப்பு பெருமளவில் இருக்கிறது என்றாலும் ஆதரிப்பவர்கள் ஒரு சிலர்தான் என்றாலும், திராவிட நாடு வந்துதான் ஆகும், மற்றவர்கள் சொல்வது சரியல்ல என்று சொல்வது சரியல்ல. நாங்கள் சொல்வதுதான் சரி என்று ஒரு சிறுபான்மையோர் உரிமை கொண்டாடுவது ஜனநாயக அடிப்படையில் நடைபெறாது. அவர்கள் ஒரு சர்வாதிகாரியாக இருந்து, ராணுவ உடையில் வந்து, ஆட்சி செலுத்தி, மக்களை அடக்கி ஒடுக்கினால், அப்பொழுது அவர்கள் என்னுடைய சக்தி இருக்கிறது, நான் சொல்வதுதான் சரி என்று வேண்டுமானால் சொல்லலாம். ஆனால், நாம் இன்றைக்கு வாழ்வது ஜனநாயக அடிப்படையில். அதில் மக்கள் ஆதரவு இருந்தால்தான், ஒரு கட்சிக்கு அவர்கள் ஆதரவு இருந்தால் தான், ஒரு லட்சியத்திற்கு அவர்கள் ஆதரவு இருந்தால்தான் அதற்கு நாட்டில் இடம் உண்டு. இல்லையென்றால், அந்த லட்சியம் அழிந்து ஒழிய வேண்டும். அதைத்தான் கழகத்தினரைத் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொள்ளுகிறேன். தயவு செய்து அதை மறைக்க முயற்சிக்க வேண்டாம், ஒளிக்க வேண்டாம். உங்கள் லட்சியத்தை எத்தனை பேர்கள் ஆதரிக்கிறார்கள்? எத்தனை பேர்கள் எதிர்க்கிறார்கள்? அந்தக் கணக்குப் போடும் போது, திரும்பத் திரும்பச் சொல்லுகிறேன், உங்கள் எண்ணிக்கை சட்ட சபையில் 15-லிருந்து 12-ஆகக் குறைந்த பிறகும், என்ன நிலை என்று பாருங்கள் என்று. இல்லை, இல்லை, நாங்கள் சொல்லுவதுதான் சரி என்று மேலும் மேலும் சொல்லுவது, தமிழர்கள் ஒப்புக் கொள்ளாத விஷயம். மேடைக்கு வேண்டுமானால் உதவலாம்; நாடக மேடைக்கு வேண்டுமானால் சரியாக இருக்கலாம்; சட்ட சபைக்கு அது ஒவ்வாது; மக்களுக்கு அது ஒவ்வாது. நான் ஓட்டுக்கு விட்டுப் பார்க்கலாம் என்று சவால் விடவில்லை; மக்கள் திராவிட நாட்டுப் பக்கம் இருந்தால், பெரும்பாலான மக்கள் இன்றைக்கு திராவிட நாடு வேண்டுமென்றால், இன்றைக்கு நான் அரசியலிலிருந்து விலகிக்கொள்ளத் தயார். அண்ணாதுரை அவர்கள் சொன்னார்கள், தியாகம் செய்வேன் என்று. தியாகம் செய்வேன் என்று வெறுமனே வாயில் சொல்லும் நிலைமையில் தான் இருக்கிறார்கள். கொஞ்சம்கூட தியாகத்தில் பழக்கம் இல்லாதவர்கள். நாங்கள் தியாகத் தீயில் குளித்து, தியாகத்தில் வாழ்ந்தவர்கள்; எங்களுக்குத் தியாகத்தைப்பற்றிச் சொல்ல திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு என்ன வாய்

[Sri C. Subramaniam] [13th November 1961

இருக்கிறது? (குறுக்கீடு.) தியாகத்தில் வாழ்ந்தவர்கள் எவரும் தி.மு. கழகத்தில் இருப்பதாக எனக்குத் தெரியாது. இப்பேர்ப் பட்டவர்களா எங்களிடம் தியாகத்தைப் பற்றிச் சொல்ல வரு கிறார்கள்? யாரிடத்தில் அவர்கள் பேசுகிறார்கள்? தங்களையே உணராமல் பேசுகிறார்கள்; மற்றவர்களை ஏமாற்றச் சொல்லும் வார்த்தைகளை இங்கும் சொல்லவேண்டாம் என்று சொல்லு கிறேன்.

**Sri A. GOVINDASAMY :** ஆத்திரப்படாதீர்கள்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** ஆமாம், ஆத்திரம் தான், நாட்டைத் துண்டுபோடவேண்டும் என்றால்? இதிலே இரண்டில் ஒன்றைப் பார்த்துவிடுவோம், மக்கள் ஆதரவு யாருக்கு இருக்கிறது என்று. பலாத்கார அடிப்படையில் நான் இதைச் சொல்லவில்லை. மக்கள் ஆதரவு யாருக்கு இருக்கிறது என்று பார்த்து முடிவு செய்யவேண்டும் என்று சொல்ல விரும்பு கிறேன்.

பண்டித ஜவஹர்லால் நேருவை எடுத்துக் காட்டி Self determination -ஐப் பற்றிச் சொன்னார்கள். பிப்ரவரி மாதத்தில் Self determination -ஐப் பார்ப்போம் என்று சொல்லுகிறேன். யார் திராவிட நாடு வேண்டும் என்று சொல்லுகிறார்கள், யார் வேண்டாம் என்று சொல்லுகிறார்கள் என்று பார்ப்போம். மக்கள் முடிவை நாங்கள் ஏற்றுக்கொள்ள தயாராக இருக்கிறோம். "நாங்கள் மக்கள் முடிவை ஏற்றுக்கொள்ள தயாராக இல்லை" என்று திராவிட முன் னேற்றக் கட்சி தலைவர் வீண் வாதம் செய்கிறார்; அந்த வாதம் இந்த நாட்டுக்கு ஒவ்வாத வாதம் என்று சொல்ல விரும்பு கிறேன் . . .

**Sri C. N. ANNADURAI :** நம்முடைய கனம் நிதி அமைச்சர் இரண்டு நாட்களாகவே ரொம்ப சுறுசுறுப்புக் குறைந்து இருந் தார்கள்; இன்றைய தினம் அவர் ஆத்திரத்தோடு பேசுகிறார்கள். ஆத்திரத்தோடு பேசுவது அழகாக இருக்கிறது. ஆனால், எண்ணிக் கொண்டு பேசும் எண்ணம் தவறாக இருக்கிறது. இன்றைக்கு மக்கள் தீர்ப்பு அளிக்காவிட்டாலும், ஒரு முறையல்ல, இன்னொரு முறை, இன்னுமொரு முறை பார்ப்போம் என்றேன். மக்களை ராணுவ உடையில் மிரட்டுவேன் என்று அவர்கள் அஞ்ச வேண்டாம்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** மிரட்டினாலும் அந்த உடையில் யார் இருக்கிறார் என்று தெரியும், பயப்படமாட்டேன் என்ற உறுதியைத் தெரிவிக்கிறேன்.

ஆகையால், இந்த நாட்டுப் பிரிவினை உண்மையிலேயே உடனடி யாக முடிவு செய்ய வேண்டிய காரியம் என்று சொல்ல விரும்பு கிறேன். அந்தப் பிரச்னை ஒரு போராட்டமாகவே நடந்து கொண்டு இருக்கும் வரையில் வேறு காரியங்களில் நமது முழு கவனத்தைச் செலுத்த முடியாது.

13th November 1961] [Sri C. Subramaniam]

இன்றைக்கு "ஸ்டேடஸ்கோ" (Statu, quo) பற்றிச் சொன்னார்கள். இருப்பது இருக்கின்றபடியே இருப்பதற்கு என்ன காரணம் என்று கேட்டார்கள். "ஸ்டேடஸ்கோ" இருப்பதற்குக் காரணம் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. ஒன்றுபட்ட நாடாக இருப்பதை ஏன் பிரிக்க வேண்டும் என்பதற்குத்தான் அவர்கள் காரணம் கொடுத்தாக வேண்டும். அன்று திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர் திட்டத்தைப்பற்றிப் பேசும்போது, பிரான்சின் வளர்ச்சிக்குக் காரணம் அது ஒரு சிறிய நாடாக இருப்பதுதான் என்று சொன்னார்கள். இன்றைக்கு ஐரோப்பிய நாடுகள் வளர்ந்திருப்பது எந்த அடிப்படையில்? சிறு நாடுகளாக இருப்பவைகளும், பெரிய சாம்ராஜ்யத்தை வைத்து வாழ்ந்தார்கள். சாம்ராஜ்யம் போனவுடன், இன்றைக்கு ஐரோப்பிய நாடுகளையெல்லாம் கூட்டுச் சேர்த்து ஒன்றாக இணைக்க முடியுமா என்று பார்க்கிறார்கள். பொருளாதார இணைப்பு மட்டுமல்ல, அரசியல் இணைப்பும்கூட. சிறிய நாடான பிரிட்டனும், பெரிய சாம்ராஜ்யம் இருந்ததால், தனித்து வாழ முடிந்தது. இன்றைக்கு சாம்ராஜ்யம் போய் விட்டது. ஒரு சிலர் வேண்டாம் என்றாலும், அவர்களும் இந்தக் கூட்டில் ஒட்டிக்கொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இதைத்தான் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் உணர வேண்டும். தொழில் புரட்சிக்குப் பிறகு, என்ன நிலைமை என்று உணரவேண்டும். பண்டித ஜவஹர்லால் சொன்னார்கள், அணுசக்தி வந்த பிறகும் பழைய வாதங்களைச் சொல்வது சரியல்ல என்று. இன்றைக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய சூழ்நிலையில், மாறுதல்கள், உற்பத்தி சாதனங்கள் எந்த முறையில் இருக்க வேண்டும் என்று ஆராய்ச்சிகள் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஆகவே, தயவுசெய்து வரலாற்றைக் கூறி இந்தப் பிரிவினையைக் கேட்க வேண்டாம். நாம் அந்தக் காலத்தில் வாழவில்லை. இன்றைக்கு நாம் முன்னேற்றப் பாதையில், மாறுதலான சூழ் நிலையில், இன்னும் பொருளாதார மாறுதலை நோக்கிப் போகிறோம். பழைய முறையில், விவசாய அடிப்படையில் வாழ்க்கை நடத்தலாம் என்றோ, அதற்கும் முன்னால் இருந்த நாடோடி வாழ்க்கை நடத்தலாம் என்றோ, அதையெல்லாம் எடுத்துக்காட்டி, அந்த முறையில் நினைப்பது சரியல்ல. நாடுகள் ஒன்றாக்கப்பட வேண்டும். உலகமே ஒன்றாகப்படவேண்டும் என்ற முறையில் உலகத்து நாடுகள் போகின்றன. அந்தப் போக்கை மாற்றினால், உலக முன்னேற்றமே தடைபடும். ஆகவே, நான் சொல்லுகிறேன்—தாழ்மையாகச் சொல்லுகிறேன்—காரசாரமாகச் சொல்லவில்லை—அடி பணிந்து சொல்லுகிறேன், வரலாற்று அடிப்படையில் திராவிட நாடு அமைக்க முயலவேண்டாம், இந்த நாட்டின் மொழியைத் தியாகம் செய்கிறோம் என்றும் சொல்லவேண்டிய அவசியம் இல்லை. ஒன்றாக இயங்கும் நாடுகளிலும் பலமொழிகள் இருக்கின்றன. வேண்டுமானால், திராவிட முன்னேற்றக் கட்சித் தலைவருக்கு பாஸ்போர்ட் வாங்கித் தருகிறேன், அவர்கள் கொஞ்சம் உலகத்தைச் சுற்றிப் பார்க்கட்டும். அப்போது ஒரு நாடாக உலகத்தில் நிலைப்பது எப்படி என்று கவனம் செலுத்த முடியும்.

1 30 p.m.

அதற்காக, ஒற்றுமைக்காக, இந்தியைப் பூராவும் விட்டுவிடலாமென்று சிலரும், இன்னும் சிலர் பேசுவதுபோல் ஆங்கிலத்தைப்

[Sri C. Subramaniam] [13th November 1961

பூராவும் ஏற்றுக்கொள்ளலாம் என்ற முறையிலும் பேசவேண்டிய அவசியம் இல்லை. நாட்டிலுள்ள எல்லோரும் புரிந்துகொள்ளு வதற்கு ஒரு பொது மொழி அவசியம். அதற்காக நம்முடைய மொழியையோ, அல்லது பண்பாட்டையோ விட்டுக்கொடுக்க வேண்டிய அவசியம் கிடையாது; புதிதாக, சமஷ்டி முறை ஏற் பட்டது எதற்காக? வெவ்வேறு பகுதிகளிலே இருக்கிற மக்கள், வெவ்வேறு பண்புகளைக் கொண்ட மக்கள், வெவ்வேறு மொழிகளைக் கொண்ட மக்கள், இவர்களுக்கிடையே, அரசியல் துறையிலே இணைப்பு ஏற்பட முடியுமா என்பதைப்பற்றி, மனித வளர்ச்சி அடிப்படையிலே, பண்பு வளர்ச்சி அடிப்படையிலே, ஆராய்ச்சி செய்து சமஷ்டியை ஏற்படுத்தினார்கள். அதற்காக, 2,000 வருஷங் களுக்கு முன்பு இருந்ததையே இப்பொழுது கடைப்பிடிப்பதிலே அர்த்தம் இல்லை, பிரயோஜனம் இல்லை.

DEPUTY SPEAKER: I think the House has no objection to sit for ten minutes more.

THE HON. SRI C. SUBRAMANIAM: I shall finish my speech in ten minutes.

DEPUTY SPEAKER: All right.

**THE HON. SRI C. SUBRAMANIAM:** உண்மையான சமஷ்டி என்று சொன்னால், மீதமுள்ள அதிகாரம் **(Residuary power)** ஸ்டேட்டில்தான் இருக்க வேண்டுமென்ற கருத்தைத் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் சொன்னார்கள். ரெஸிடியுவரி பவர்ஸ் மத்திய அரசிடம் இருப்பதாலேயே சமஷ்டி அமைப்பில் குறைவு ஏற்பட்டு விடுவதில்லை. இந்திய அரசியல் அமைப்பைப் படித்துப் பார்த்தால் எனக்குத் தெரிந்தவரையில் எந்த ஸப்ஜெக்ட் ஆக இருந்தாலும் சரி, அதை விட்டுவிடவில்லை. ஒரு பட்டியலிலே இல்லாவிட்டாலும் இன்னொரு பட்டியலிலே போட்டிருக்கிறோம். எதிர்பாராத விதமாக ஒரு பட்டியலிலேயும் சேர்க்காது ஏதாவ தொரு அதிகாரம் இருக்குமேயானால், அதை மத்திய அரசாங்கத் திற்கு விட்டுவிட வேண்டுமென்று இந்திய அரசியல் சட்டம் சொல்லுகிறது. அது எந்த அளவுக்கு ராஜ்யங்களைப் பாதிக் கிறது என்பதைப் பார்க்கவேண்டும். இந்தப் பட்டியல்களைப் பார்த்த பிற்பாடு, இவ்வளவு முக்கியமான அதிகாரம் விட்டுப் போய் இருக்கிறது, மத்திய அரசாங்கத்திற்குப் போயிருக்கிறது என்று சொன்னால், அதற்கு நான் பதில் சொல்லத் தயாராய் இருக் கிறேன். அன்றைக்கு உட்கார்ந்து பரிசீலனை செய்த அரசியல் நிபுணர்களுக்குத் தெரிந்தவரையில், வரையறுக்கப்படாத அதி காரம் ஏதாவது இருக்கிறதா என்று பார்த்தால், இல்லை என்றுதான் சொல்லவேண்டும். ஆகவே, இதை வைத்துக்கொண்டு, இது சரியான சமஷ்டி அல்ல என்று சொல்வது சரியல்ல.

நமது வரலாற்றைப் பார்ப்போம். நாம் பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் கீழ் வாழ்ந்து வந்தோம். அன்றைக்கு நாம் விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி, ஒன்றுக்கப்பட்டோம். ஒரு சில சமஸ்தா னங்கள் சில மன்னர்கள், சிறுசிறு பகுதிகள் விடப்பட்டிருந்தாலும் கூட, வேறு என்ன பிரிட்டிஷ் ஆதிக்கத்தில் நடந்திருந்தாலும் கூட, பிரிட்டிஷார் இந்தியாவை ஒரு குடையின்கீழ் கொண்டு

வந்தது ஒரு பெரிய சாதனை. ஆனால் அன்றைக்கு ஏன் எல்லோ ரும் ஒரு குடையின்கீழ் இருக்க வேண்டுமென்று கேட்பதற்கு யாருமில்லை. வரலாற்றின் அடிப்படையிலே--ஒரு வருஷம் அல்ல, 10 வருஷங்கள் அல்ல, 100 வருஷங்கள்—பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் கீழ் ஒன்றுபட்ட இந்தியாவாக வாழ்ந்து வந்திருக்கிறோம், சுதந் திரம் பெறுவதற்கு முன்பாக. ஆனால், பழங் காலத்தில் கனம் அங்கத்தினர் அண்ணாத்துரை அவர்கள் சொன்னதைப்போல் சாம்ராஜ்ய அடிப்படையில் தமிழ்நாட்டு மன்னர்கள் இமயமலை வரை தங்கள் ராஜ்யத்தை பரப்ப முயன்றார்கள், வடக்கேயுள்ள மன்னர்கள் கன்னியாகுமரிவரை செல்ல முயன்றார்கள். அது கை கூடவில்லை. சம்மதத்தின் பேரில் நமக்கு சுதந்திரம் கிடைத்ததால் எந்தவிதமான குறையும் ஏற்படவில்லை, எந்த விதமான உரிமையும் பறிபோய் விடவில்லை என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். உரிமை பறிபோய் விட்டது, அந்த உரிமையைக் காப்பாற்ற வந்திருக்கிறோம் என்று பேச வேண்டிய அவசியமே கிடையாது. அன்றைக்கு தமிழ் மக்கள் ஒப்புக் கொண்டுதான் தமிழ்நாடு இந்தியாவுடன் இணைந்திருக்கிறது. ஒப்புதலுடன்தான் இணைந்திருக்கிறது. ஆனால், இன்றைக்கு வடக்கே போயிருக்கக்கூடிய இரண்டு தி.மு.க. பிரதிநிதிகளில் பிரிய வேண்டுமென்று சொல்வதிலேயும் கட்சி ஏற்பட்டுவிட்டது. ஒருவர் தான் பிரியவேண்டுமென்று சொல்கிறார். மற்ற தமிழ் பிரதிநிதிகள் அத்தனை பேரும் இந்தியாவின் ஒற்றுமையை நீடிக்க விரும்புகின்றனர். நம்முடைய உரிமையை வேறு யாரும் பறித் துக்கொண்டு போய்விடவில்லை. நாமே ஒப்புக்கொண்டுதான் இன்றைக்கு இந்திய யூனியனிலே இருக்கிறோம். யாரோ உரிமை யைப் பறித்துக்கொண்ட மாதிரியும், தாங்கள் ஏதோ இதைக் காப்பாற்றுவதற்காக அவதரித்த அவதாரங்கள் என்று திராவிட தலைவரோ, அவருடைய தம்பிகளோ பேச வேண்டிய அவசியம் கிடையாது. (குறுக்கீடு.) நீங்கள் பேசுவது மட்டமானால், நான் பேசுவது மட்டமென்று எடுத்துக் கொள்ளுங்கள்.

இன்னொரு விஷயத்தைப்பற்றி ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார் அவர்கள் குறிப்பிட்டார்கள். அதாவது, இந்தி திணிப்புப்பற்றி.

**Sri C. N. ANNADURAI :** நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள், நான் தமிழ்நாடு தனி நாடாக இருந்த காலத்தைக் காட்டியதை வைத்துக்கொண்டு, அதே முறையிலே அமைக்க வேண்டுமென்று சொல்வதாக தப்பு அபிப்பிராயத்துக்கு வந்துவிட்டார்கள். நெடுங் காலத்திற்கு முன்பே தனி நாடாக இருப்பதற்கு தகுதி பெற்றது என்பதற்கான காரணத்தைத்தான் வரலாற்றிலிருந்த ஆதாரத் தைக் காட்டினேனே தவிர, பண்டைக் காலத்தைப் போல் பட்டாடை அணிந்துகொண்டு, உடைவாளை வைத்துக்கொண் டிருக்க வேண்டுமென்று சொல்லவில்லை. இந்தியா ஒன்றாக இருந் தால் தமிழை விட்டுக்கொடுத்து விடவேண்டுமென்று சொல்லுவது நீங்கள் எப்படி இந்திக்காக எதையும் விட்டுவிடத் துணிகிறீர்கள் என்று சுட்டிக்காட்டுவதற்காகச் சொன்னேனே தவிர, எங்களுக் காக அல்ல.

[13th November 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : நீங்கள் இவ்வாறு சொல்வீர்கள் என்றுதான் நானே குறிப்பு எழுதி வைத்துக்கொண்டிருக்கிறேன். அங்கே என்ன பதிவாயிருக்கிறது என்பதைப் பார்க்கலாம். அவர்கள் என்னுடைய நிலையிலிருந்தால், இந்திய ஒற்றுமை வேண்டுமென்று நினைக்கக்கூடிய நிலையிலிருந்தால், இதற்காக தமிழையும் விட்டுக்கொடுப்பதற்குத் தயாராயிருப்பேன் என்று சொன்னீர்கள்.

SRI C. N. ANNADURAI : "டபிள் நெகடிவ்" உபயோகப் படுத்துகிறீர்களே.

THE HON. SRI C. SUBRAMANIAM : டபிள் நெகடிவ் போட்டாலும் சரி, ஸிங்கில் நெகடிவ் போட்டாலும் சரி, தாங்கள் சொன்னதைத்தான் நானும் திருப்பிச் சொல்லுகிறேன். திராவிட நாடு ஒற்றுமைக்காக, தமிழை விட்டுக்கொடுக்கத் தயாரா இருப்பீர்கள் போலிருக்கிறது என்று கேட்டேன்.

SRI C. N. ANNADURAI : திராவிட நாடு ஒற்றுமையிலே தமிழ் மொழிப் பிரச்னை வரவில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஏன் வரவில்லை? திராவிடநாடு நான்கு மொழிகள் பேசும் நாடாயிற்றே?

SRI C. N. ANNADURAI : உலகப் பொது மொழியாகிய ஆங்கிலம் ஆட்சி மொழியாக ஏற்றுக்கொள்ளப்படுமென்று நம்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆங்கிலத்திற்குத்தான் நீங்கள் போவீர்கள். அப்பொழுது, நான்கு மொழி பேசக்கூடியவர்கள் ஒன்றாக இருக்க முடியுமா? அப்படியானல், ஏன் 7 மொழிகள் பேசுகிறவர்கள், 10 மொழிகள் பேசுகிறவர்கள் ஒன்ருக இருக்க முடியாது? திராவிடத்திலே அன்னிய மொழியை ஏற்றுக் கொண்டால், ஏன் இந்தியாவின் ஒற்றுமைக்காக, வெரொரு மொழியை பொது மொழியாக ஏற்றுக்கொள்ளக்கூடாது? ஆங்கிலம் என்ன இனிக்கிறதா? மற்ற மொழிகள் இனிக்கவில்லையா? தமிழைப்பற்றி எனக்கும் அவருக்கும் ஒரே கருத்துத்தான். ஆங்கிலத்திலே அவருக்குத் தனி மோகம். எனக்கு அது இல்லை. அவருக்கு அது நெடுங்காலம் பழக்கம். ஆங்கில ஆதிக்கம் ஏற்பட்டது என்ருல், அது நல்லது என்று அவர் நினைக்கிருர். நான், அந்த ஆதிக்கம் இருந்தாலும், எந்த அளவிற்கு அதை வைத்துக்கொள்ள வேண்டுமோ, அந்த அளவுக்குத்தான் வைத்துக் கொள்ளலாம் என்று நினைப்பவன். தமிழுக்குப் பூரண உரிமை கொடுத்து அந்த அடிப்படையிலே ஒன்றுபட்ட இந்தியாவில் நாம் வாழ முடியுமென்று நான் கருதுகிறேன். தமிழை விட்டுக் கொடுக்க வேண்டிய அவசியம் கிடையாது. இந்த சபையிலே நடவடிக்கை நடத்துவதற்கு இந்தி வேண்டிய அவசியம் கிடையாது. அரசாங்க நிர்வாகத்தை நடத்த இந்தி வேண்டிய அவசியம் கிடையாது. ஆங்கிலமும் வேண்டிய அவசியம் கிடையாது. ஆனல், இப்பொழுது இருக்கக்கூடிய நிலையில் ஆங்கிலத்தை

13th November 1961] [Sri C. Subramaniam]

ஓரளவுக்கு வைத்துக்கொள்ள வேண்டுமென்று சொன்னால், அந்த அளவுக்குத் தமிழ் வளரவில்லை என்பதால்தான். இன்று பட்டப் படிப்புக்குக்கூட நான் விரும்புவது தமிழ். திரு. அண்ணாதுரை வேண்டுமானால் ஆங்கிலத்தை விரும்பலாம். தமிழுக்கு உயர்வு ஏற்படவேண்டும், தகுதி ஏற்படவேண்டும், என்று வாயளவில் சொல்வதோடு மட்டுமல்லாமல், அதற்கு முயற்சியும் செய்கிறேன். அவர்கள் நினைப்பதுபோல், திராவிட ஒற்றுமைக்காக இருந்தாலும் சரி, இந்திய ஒற்றுமைக்காக இருந்தாலும் சரி, தமிழை தியாகம் செய்து கொடுக்க வேண்டிய அவசியமில்லை. என்னைப் பொறுத்தவரையில், நான் தமிழைத் தியாகம் செய்யமாட்டேன் என்றும் உறுதி சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, இந்தி திணிப்பைப் பற்றிச் சொன்னார்கள். திரும்பத் திரும்ப அதைப்பற்றிச் சொல்லியாய்விட்டது. அதைப் பொறுத்த வரையில் 1965-க்குப் பிற்பாடும் ஆங்கிலமும், இந்தியும் தொடர்ந்து இருக்கவேண்டும். இந்தியைப் படிக்க முடியவில்லை, ஆங்கிலத்திலேதான் நாம் தகுதி பெற்றிருக்கிறோம். ஆங்கிலம் இருக்கத்தான் போகிறது. அதை யாரும் இன்று மறுக்க முடியாது. நாட்டினுடைய ஒற்றுமைக்காக, இந்தி வரவேண்டுமென்று சொல்லுகிறார்கள். இந்தி திணிக்கப்பட்டால் நாட்டின் ஒற்றுமை பாதிக்கப்படுமென்பதை வடக்கே இருக்கிறவர்கள் உணரவேண்டும் என்பதுதான் எனது வாதம். இருசாராருக்கும்தான் எடுத்துச் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. அந்த முறையில்தான் ஆங்கிலம் நீடிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

அதேமாதிரி, தேவநாகரி லிபியைப்பற்றித் திருப்பித் திருப்பி ஒவ்வொருவரும் சொல்லிக்கொண்டு வருகிறார்கள். பிரதம மந்திரிகளே இதற்கு விளக்கம் சொல்லியிருக்கிறார்கள். இப்பொழுதிருக்கும் தமிழ் எழுத்தை எடுத்துவிட்டு, தேவநாகரி லிபியில் தமிழ் படிக்க வேண்டும் என்ற ஏற்பாடு எப்போதும் கிடையாது. இப்பொழுதிருக்கும் தமிழ் இலக்கியம் தேவநாகரி லிபியில் வருவது என்ற பிரச்சினையும் இல்லை. மற்ற பகுதியிலே இருக்கிறவர்கள் தேவநாகரி லிபியில் தமிழ் படிக்கிறோம் என்று சொல்வார்களானால் அதற்கு நாம் குறுக்கே நிற்கப்போவதில்லை. இதற்கும் அதற்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. அதைத் திருப்பித் திருப்பிச் சொல்லியிருக்கிறேன். தேவநாகரி இங்கு வரப்போவதில்லை. வருவதற்கும் யாரும் விடமாட்டார்கள். யார் இங்கு அதிகாரத்தில் இருந்தாலும் அது வருவதற்கு இடமளிக்கமாட்டார்கள். தேவநாகரி பொது லிபியாக வந்து தமிழ் எழுத்தை அழித்துவிடப் போவதில்லை என்று உறுதியை நான் சொல்கிறேன். தேவநாகரி லிபி வந்துவிடும், அதற்காக திராவிடநாடு பிரித்துக்கொண்டுவிட வேண்டும் என்று அந்தப் பூச்சாண்டியைக் காட்டிச் சொல்ல வேண்டாம்.

தமிழை வேறு லிபியில் கற்றுக்கொள்வதானால் அதற்கு சொல்வதைத்தான் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது இல்லை. ரோமன் ஸ்க்ரிப்டுக்கும் ஆங்கிலத்திற்கும் சம்பந்தமே இல்லை. தயவுசெய்து அதைப் புரிந்துகொள்ள வேண்டும். ஸ்க்ரிப்டுக்கும்

[Sri C. Subramaniam] [13th November 1961

ஆல்பபட்டுக்கும் வித்தியாசம் இருக்கிறது. ஒலி வேறு ; எழுத்து வடிவம் வேறு. எழுத்து வடிவம் மாறிக்கொண்டே வந்திருக் கிறது. ஒலி வேண்டுமானுல் மாருமல் இருக்கலாம். ஒலி வடி வத்தில் மாறுதல் இல்லை. அந்த ஒலியை எப்படி வேண்டுமானு லும் எழுத்து வடிவில் போட்டுக்கொள்ளலாம். இருநூறு, 300 வருஷங்களாக ஒரே வடிவாக தமிழ் எழுத்து இருந்திருக்கிறதா என்ருல் இல்லை. அது மாறிக்கொண்டு வந்திருக்கிறது. ஒலி வேறு; எழுத்து வடிவம் வேறு. எழுத்து வடிவம் மாறினுலும் ஒலி வடிவத்தை மாற்றிக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. அப்படி வடிவத்தை மட்டும் மாற்றிக்கொண்டவர்கள் தங்களுடைய அனுபவத்தை நமக்குச் சொல்லியிருக்கிருர்கள்.

கனம் திரு. சின்னதுரை அவர்களும் மற்றவர்களும் பேசும் போது காங்கிரஸ் செய்திருக்கும் தவறுகளை எடுத்துக் கூறினுர்கள். தவறுகளை எடுத்துச் சொல்லும்போது அவைகளை ஒப்புக்கொள்ள என்றைக்கும் தயாராயிருக்கிறேன். காங்கிரஸ் செய்ததெல்லாம் நூற்றுக்குநூறு சரி அதில் எந்தவிதமான குற்றமும் இல்லை, தவறும் இல்லை என்று நான் சொல்ல முன்வரவில்லை. தவறு இல்லாமலேயே நிர்வாகத்தை நடத்திக்கொண்டிருக்கிருேம் என்று நான் சொல்லவில்லை. பல குற்றங்கள் நடைபெற்றிருக்கலாம். பல தவறுகள் நடைபெற்றிருக்கலாம். நான் முன்பு சொன்னதுபோல், தவறுகளை நீக்கிக்கொள்ள முயற்சி செய்ய வேண்டியதுதான். ஒன்றைச் செய்துவிட்டோம் என்பதற்காக அது தவருக இருந் தாலும் அதையே தொடர்ந்து செய்துகொண்டு போகக்கூடாது தான். முஸ்லிம் லீகுடன் ஒப்பந்தம் செய்து கொண்டது தப்பு என்ருல் அதைத் திருத்தத் தயார். ஒரு தடவை பண்ணிவிட் டோம் என்பதால் தொடர்ந்து அம்மாதிரியே செய்துகொண்டு போகவேண்டும் என்ற அடிப்படையில் அல்ல நாங்கள் இயங்க விரும்புவது. ஆகையால்தான், நாடு ஒற்றுமைப்பட வேண்டு மென்ருல், அதற்கு என்ன காரியங்கள் செய்ய வேண்டுமோ அதைச் செய்யத் தயாராயிருக்கிருேம். தவறு செய்தாலும் அதைத் திருத்திக்கொள்ளாமல், ஒரு தடவை சொன்னதுதான் முடிவு என்ற முறையிலே நாங்கள் எண்ணுவது இல்லை. தவறுகள் ஏற்பட்டிருந்தால் அவைகளைத் திருத்திக்கொள்ளத் தயாராய் இருக்கிருேம் என்றுதான் சொல்லிக்கொள்கிறேன்.

கனம் திரு. அண்ணுதுரை அவர்கள் சொன்னுர்களோ, மற்றவர் சொன்னுர்களோ ஞாபகம் இல்லை. இந்த ஒருமைப்பாடு மகாநாடு 'ஒரு தேர்தல் நாடகத்திற்குப் போட்டது' என்று சொன்னுர்கள்.

**Sri D. S. AUTHIMOOLAM :** ரிபோர்ட்டிலே இருக்கிறது என்று சொன்னுர்கள்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** கம்யூனிஸ்டுக் கட்சியி லிருந்து வந்தவர்கள், பிரஜா சோஷலிஸ்டுக் கட்சியிலிருந்து வந்த வர்கள், ஜன சங்கத்திலிருந்து வந்தவர்கள், சுதந்திராக் கட்சியி லிருந்து வந்தவர்கள் எல்லோரும் ஏமாளிகள் அல்ல. அத்தனைக் கட்சிப் பிரதிநிதிகளும் வந்திருந்தது எங்கள் தேர்தல் நாடகத் திற்கு என்று சொல்வார்களானுல், அத்தனை கட்சிகளையும் ஏமாற்றக்

கூடிய ஆற்றலும் அறிவும் எங்களுக்கு இருந்திருக்கிறது என்று ஆகிறது. அப்படியானால், நாங்கள் திராவிட முன்னேற்றக் கழகத் தாரையும் ஏமாற்ற முடியாதா என்ன? அப்படி ஒன்றும் ஏமாற்றக் கூடிய முறையில் அல்ல நாங்கள் செய்தது. உண்மையிலேயே நாட்டில் ஒற்றுமையை நிலைநாட்ட வேண்டும், நல்லதொரு சூழ் நிலையை ஏற்படுத்த வேண்டும் என்பதற்காகத்தான் மகாநாடு கூட்டப்பட்டது.

இதெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும். நான் கடைசியாக இங்கு ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நாட்டிலே ஒரு புதிய சமுதாயத்தை அமைக்க வேண்டுமென்று விரும்புகிறேன். நாட்டிலே வறுமை, பிணி, அறியாமை இவைகளையெல்லாம் போக்க வேண்டும், ஏற்றத் தாழ்வற்ற சமுதாயத்தை அமைக்கவேண்டும் என்று நினைக்கிறோம். திராவிட நாடு அமைந்துதான் அதெல்லாம் வரவேண்டும் என்பது அல்ல. இன்றைக்கு உலக நிகழ்ச்சிகள், உலக அனுபவம், மனித அனுபவம் அம்மாதிரி இருக்கிறது. ஆகவே, ஆகாத ஒன்றை, பல பேர் விரும்பாத ஒன்றை, ஒருசில சிறு பான்மையினர் பிரசாரம் செய்துகொண்டிருக்கிறார்களே அவர்கள் வீண் பாதையில் போய்க்கொண்டிருக்காமல், சக்தியையெல்லாம் ஒன்று கூட்டினால் அதன் காரணமாக நாம் இன்னும் சிறந்த காரியங் களைச் சாதிக்கமுடியும். நான் ஒப்புக்கொள்கிறேன்—இந்தி எதிர்ப்பு இல்லாமலிருந்தால் காரியங்களை நாம் இன்னும் திறமையாகச் செய்ய முடியும். அப்பேர்ப்பட்ட சக்தியைக் கொடுக்க எல்லோரும் திரண்டு வாருங்கள் என்று நான் வேண்டிக் கேட்டுக் கொள் கிறேன். அப்படி எல்லோரும் ஒன்றுபட்ட சக்தியைக் கொடுப் பதன் மூலமாகத்தான் தமிழ்நாட்டில் புதியதொரு வளத்தை ஏற்படுத்த முடியும், புதியதொரு சமுதாயத்தை ஏற்படுத்த முடியும், மக்களுடைய குறைகளைத் தீர்க்க முடியும். அவ்வாறு அல்லாது நீங்கள் பேசும்போது நாங்கள் அருவருப்பு கொள்வதும், நாங்கள் பேசும்போது நீங்கள் அருவருப்பு கொள்வதும், அதைப் பார்த்து மற்றவர்கள் கேலி செய்வதும் ஆகிய நிலைமை இல்லாமல், இன்றைக்கு மக்களுடைய விருப்பத்தை ஒப்புக்கொண்டு, பெரும் பான்மையான மக்களுடைய விருப்பம் தெரிந்ததற்குப் பிற்பாடு, உண்மையான முன்னேற்றப் பாதையில் செல்லவேண்டும். அந்த முன்னேற்றப் பாதையில் சென்று வாழ்க்கை வளத்தைப் பெருக்கு வதற்கு முன்வர வேண்டும். அப்படி முன்வந்து, தொடர்ந்து மக்கள் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கவேண்டும் என்ற நிலைமை இல்லாமல், கஷ்டப்படுகிற மக்களுக்குப் புது வாழ்வு ஏற்படும் முறையில் எல்லோருடைய சக்தியும் பயன்படவேண்டும் என்று நான் உண்மையாகக் கோருகிறேன். எதிர் கட்சியிலுள்ளவர் களின் சக்தியும் பயன்பட்டு முன்னேற்றப் பாதையில் நாமெல்லோ ரும் கைகோர்த்து செல்லவேண்டும் என்பது தான் என்னுடைய விருப்பம் என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆகவே, இந்த ஆகாத ஒன்றை, வேண்டாத ஒன்றையே நினைத்துக்கொண்டு வரலாற்றை நினைத்துக்கொண்டு, ஆயிரம் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னால் இருந்ததையே நினைத்துக்கொண்டு இருக்காமல், இன்றைய நிலையில்

[Sri C. Subramaniam] [13th November 1961

நீங்களும் உடன் சேர்ந்து ஒன்றுபட்ட சக்தியாக நாட்டிலே பல நல்ல காரியங்களைச் செய்வதற்கு முன்வர வேண்டும் என்று உண்மையிலேயே அடி பணிந்து மிகப் பணிவோடு—என்றால் எவ்வளவு பணிய முடியுமோ அவ்வளவு பணிவோடு சொல்வது மட்டுமல்ல—வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன் .

DEPUTY SPEAKER : The amendment of Sri V. K. Kothandaraman is deemed to have been withdrawn because I am not going to put the original motion to the vote of the House. The original motion is deemed to have been talked out.

The House will now adjourn and meet again at 8-30 a m. to-morrow.

1-45 p.m. The House then adjourned.

## V.— PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. STATUTORY RULES AND ORDERS

386. *Notification issued with G.O. No. 697, Revenue, dated 7th September 1961, exempting from payment of entertainment tax in respect of film shows to be exhibited in Madras from 7th to 13th November 1961 in connection with the International Film Festival of India, 1961. [Laid on the table of the House under section 16 (4) of the Madras Entertainments Tax Act, 1939 (Madras Act X of 1939).]*

387. *Notification issued with G.O. Ms. No. 2172, Home, dated 28th June 1961 issuing 'The Madras Motor Accidents Claims in Tribunal Rules, 1961' under section 110 (1) of the Motor Vehicles Act, 1939 (Central Act IV of 1939). [Laid on the table of the House under section 133 (3) of the Motor Vehicles Tax Act, 1939 (Central Act IV of 1939).]*

388. *Notification issued with G.O. Ms. No. 3342, Home, dated 25th September 1961 amending the Madras Motor Vehicles Rules, 1940, published with Home Department Notification No. 357, dated the 29th March 1940, at pages 1 to 40 of the Fort St. George Gazette, dated the 30th March 1940, as subsequently amended. [Laid on the table of the House under section 133 (3) of the Motor Vehicles Act, 1939 (Central Act IV of 1939).]*

### B. REPORTS, NOTIFICATIONS AND OTHER PAPERS.

241. *The Madras Hill Stations (Preservation of Trees) Amendment Bill, 1961.*